# சொல்வயல்

திங்கள் மின்னிதழ்

சொல்வளமே மொழிவளம் நெல்வளமே நாட்டின்வளம்

" சொற்குவை தேரும் பாவலர் மேவத் தொகுப்பீடம்"
(திருவிளையாடற்புராணம்–
தருமிக்குப் பொற்கிழியளித்த படலம்)

ஐ.எஸ்.பி.என் (ISBN): 978-81-958032-0-0

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் வெளியீடு

வயல் : 4 விளைச்சல் : 45 திருவள்ளுவர் ஆண்டு 2055 பிப்பிரவரி – 2024


## உள்ளே...











# சருக்கரைத் துறைக் கலைச்சொற்கள்

| | |
|---|---|
| Agronomy | – உழவியல் |
| Air cooler | – வளிக்குளிர்விப்பி |
| Anti priming pipe | – திவலை தடுப்புக் குழாய் |
| Automizer | – ஆவியாக்கி |
| Bagasse | – கரும்புச் சக்கை |
| Bagasse elevator | – சக்கை தூற்றி |
| Boiler house | – கொதிகலன் நிலையம் |
| Brake linear | – நிறுத்துப் பட்டை |
| Burnt cane | – எரிந்த கரும்பு |
| Cane carrier | – கரும்பு இழுப்பூர்தி |
| Cane shaver | – கரும்பு சீவி |
| Caramelisation | – சருக்கரை தீய்தல், கருகுதல் |
| Cultural operations | – உழவுச் செயல்பாடு |
| Drum Turner | – சக்கை திருப்பி |
| Feed roller | – உள்ளீட்டு உருளை |
| Fertilizer sugarcane | – உரமிட்ட கரும்பு, உரக்கரும்பு |
| Gasket | - தடை வளையம் |
| Inflorescence | – பூங்கொத்து |
| Magma | – சருக்கரைப் பாகு |
| Mill roller | – பொறி உருளை |
| Motion gear | – விசை பற்சக்கரம் |
| Pol percent | – சருக்கரைத் தர விழுக்காடு |
| Sugar grader | – சருக்கரை தரம் பிரிப்பி |
| Top rot | – குருத்து அழுகல் |
| Weedicide | – களைக்கொல்லி |

சொற்குவை (sorkuvai.com) வலைத்தளத்தில் தமிழுக்கு நிகரான ஆங்கிலச் சொற்களையும், ஆங்கிலத்திற்கு நிகரான தமிழ்ச்சொற்களையும் பார்த்துப் பயன்கொள்ளலாம்.

# சொல்வயல்


செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் வெளியீடு
திருவள்ளுவர் ஆண்டு 2055 கும்பம் (மாசி)
பிப்பிரவரி – 2024

ஆசிரியர் : முனைவர் கோ.விசயராகவன்
இயக்குநர்

பொறுப்பாசிரியர் : முனைவர் வே. கார்த்திக்

இதழ்க்குழு : திரு. கி. இராமர்
திரு. ஏ. காந்தி
திருமதி. க. கத்தூரி



செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்
முதல் தளம், நகராட்சி நிருவாக அலுவலகக் கட்டடம்,
எண்.75, சாந்தோம் நெடுஞ்சாலை, எம்.ஆர்.சி. நகர்,
சென்னை – 600 028.
மின்னஞ்சல் : solvayal@gmail.com
வலைத்தளம் : www.sorkuvai.com

Directorate of Tamil Etymological Dictionary Project,
First floor, Urban Administrative office Campus,
No:75,Santhome high Road,
MRC Nagar, Chennai–28
Mail id : solvayal@gmail.com
Website : www.sorkuvai.com



ஐ.எஸ்.பி.என் (ISBN): 978-81-958032-0-0

# சொல்லாக்கத்தால் தமிழ் மேம்படும்!

தமிழ்மொழி தொன்மரபுவழிப்பட்டது. இலக்கண, இலக்கியச் செழுமை கொண்டது. நெகிழ்வும் உயர்வும் கொண்ட நம் மொழியானது காலச் சூழலுக்கேற்பப் பல்வேறு துறைசார்ந்த கலைச்சொற்களைத் தன்னுள், மணிமேகலையின் கை தவழ்ந்த அமுதசுரபி போல் கொண்டும், கொடுத்தும் வருகிறது. இன்றைய அறிவியல் உலகின் தடைகளைப் போக்கி ஒரு சொல்லுக்கு இணையான பல சொற்களைக் கண்டு, துறைதோய்ந்த ஆன்றோர்கள் கண் துஞ்சாது காலம் கருதாது, சொற்களை ஆக்கம் செய்து வருகின்றனர். கடன் வாங்கி வளம் பெற வேண்டிய மொழியல்ல நம் அன்னைத் தமிழ்மொழி. ஏராளமான சொல்வளங்கள் கொண்டது. புதிய புதிய சொற்களை உருவாக்கும் வல்லமை கொண்டது உலகின் முதல் மொழியாம் தமிழ்மொழி. இன்றும் உலக வல்லுநர்கள் பலர் கூடி ஆராய்ந்தாலும் தமிழ்மொழியின் பெருமையை எளிதாகக் கூறிவிட முடியாது. அவ்வாறு கூற முயல்வது கடலை, காற்றை, சூரியனைக் கைக்குள் அடக்க முயல்வதைப் போன்றதாகும்.

தமிழின் பெருமையும் மொழியின் சிறப்பும் குன்றாமல் இருக்க தமிழில் சொல்லாக்கம் தேவை. மென்மையான தமிழை மேன்மையான தமிழாக்க கலைச்சொல்லாக்கம் தேவை. ஆங்கிலத்தில் Daddy, Mommy, Uncle, Aunty, Brother, Sister என உறவிலும், Plant, Animal என அஃறிணையிலும் வேறெந்த மாற்றுச் சொல்லும் இல்லை. ஆனால், எம் அன்னைத் தமிழில்

- அப்பாவைக் குறிக்க – அத்தன், அச்சன், அப்பன், ஆஞ்ஞான், எம்மான், ஐயா, தகப்பன், தந்தை, இறைவன், ஈன்றவன், குரவன் எனப் பல சொற்கள் உள்ளன.
- அம்மாவைக் குறிக்க – அம்மை, அன்னை, ஆச்சாள், ஆத்தாள், இறைவி, ஈன்றவள், தாய், பெற்றவள், அவ்வை, அன்னாய், ஆய், எனப் பல சொற்கள் உள்ளன.
- கம்பராமாயணத்தில் அப்பா என்ற சொல் பயன்படுத்தப்பட்டுள்ளது. வாலிஇராமனைப் பார்த்து விளிப்பதாக அமைந்த பகுதியில்,

" அரக்கர் ஓர் அழிவு செய்து

கழிவரேல் அதற்கு வேறு ஓர்

குரக்கு இசைத்து அரசைக் கொல்ல

மனுநெறி கூறிற்று உண்டோ?

இரக்கம் எங்கு உகுத்தாய்? என்பால்

எப்பிழை கண்டாய் அப்பா" (4125)

சொல்லாக்கம் நமக்குப் புதிதன்று. புதிய கருத்துகள் மொழியில் புகும்போது அதற்கேற்ற சொற்களை ஆக்க வேண்டிய நிலை உருவாகிறது. கலைச்சொற்கள் பொருள்களின் குணங்களைக் கவனத்தில் கொண்டு உருவாக்கப்படுகின்றன.

cycle – துவிச்சக்கரவண்டி, ஈருருளி, மிதிவண்டி. இரண்டு சக்கரங்கள் இருப்பதால் ஈருருளி. மிதித்தோட்டுவதால் மிதிவண்டி என்ற சொற்கள் உருவாகின.

Collector – மாவட்டத் தண்டல் நாயகம், மாவட்ட ஆட்சித்தலைவர், ஆட்சியர், இவ்வாறு ஆக்கும்போது வடசொல்லைத் தவிர்த்துத் தூயதனித்தமிழ்ச் சொற்களை உருவாக்க வேண்டும். இங்கு மாவட்ட ஆட்சித் தலைவர் என்ற சொல் உருப்பெற்றாலும் சொற்சுருக்கம் கவனத்தில் கொள்ளப்பட வேண்டும். அதனடிப்படையில் ஆட்சியர் பொருத்தமான சொல்லாகும்.

கலைச்சொற்களை உருவாக்கும் போது அவை மொழி உணர்வு, சமுதாய உணர்வுடன் கொச்சைச் சொற்களை நீக்கி, நல்ல அழகான சொற்களாகக் கூறல் வேண்டும். கலைச்சொற்கள் சுருக்கமாக இருப்பது நல்லது. விரிவாக இருந்தால் அச்சொல்லை எளிமையாக்கிப் பயன்படுத்திக் கொள்ள வேண்டும்.

- அஞ்சல் நிலையம் – அஞ்சலகம்
- மின்சார் வாரியம் – மின்வாரியம்

சொல்லாக்கத்தில் மொழியுணர்வு இன்றியமையாதது.

- இரசாயனம் – வேதியியல், நிலைநலமருந்து
- பிராணவாயு – உயிர்வளி

மேலும், கலைச்சொல்லாக்கத்தில் சமூக ஏற்றத்தாழ்வுகளைக் களைதல், உடல் – மனம் தொடர்பான குறைபாடெனின் அங்குப் பிறர் மனம் புண்படாத வகையில் சொல்லாக்கம் அமைத்தல் எனப் பல்வேறு களங்களைத் தமிழ்மொழி சந்தித்துள்ளது.

- வண்ணான் – வெளுப்புத் தொழிலாளி

- பரியாரி – முடி திருத்துவோன்
- மேளக்காரர் – இசைவேளாளர்
- ஊனமுற்றோர் – மாற்றுத்திறனாளி
- குருடர் – பார்வையற்றோர்
- இலவசம் / இனாம் – விலையில்லா (இது விலைமதிப்பற்ற என்ற பொருளும் தரும்)

பொருள் வளம், சுவை வளம், சொல் வளம் என எல்லாவற்றிலும் குறையே காணமுடியாத மொழி தமிழ்மொழி. இதன் சிறப்பைச் சில சொற்களின் உருவாக்க அடிப்படையில் கண்டு வியக்கிறோம்.

சான்றாக, யானையைக் குறிக்கும் சொல்லைக் காண்கையில் பெருவியப்புக் கொள்கிறோம்.

யானை = அத்தி, ஆம்பல், உம்பல், எறும்பி, ஒருத்தல், கடிவை, கயம், கரி, களபம், களிறு, கறையடி, குஞ்சரம், கைம்மா, கைம்மை, தும்பி, தூங்கல், தோல், நால்வாய், புகர்முகம், புழைக்கை, பூட்கை, பெருமா, பொங்கடி, மதகயம், மதமா, மந்தமா, மருண்மா, மாதங்கம், மொய், வயமா, வல்விலங்கு, வழுவை, வேழம் இப்படி யானை என்ற ஒரு உயிரினத்தைக் குறிக்க குறைந்தது 33–க்கும் மேற்பட்ட சொற்களைத் தரும் வளமிக்க மொழி நம் தமிழ்மொழி.

"தொட்டனைத்தூறும் மணற்கேணி

மாந்தர்க்குக்

கற்றனைத் தூறும் அறிவு."

என்கிறார் வள்ளுவப் பெருந்தகை. அதுபோலத் தேடத்தேடச் சொற்கள் ஊறிக்கொண்டே இருக்கும். வற்றாத நதி போன்றது நம் தாய்மொழியாம் தமிழ்மொழி. தமிழ்மொழி மிகுந்த சொல் வளம் கொண்டது. தமிழில் ஓரெழுத்து ஒருமொழிச் சொற்கள் மட்டும் 42–க்கும் மேலாக உள்ளன.

அலங்குதல் என்றால் அசைதல். அலங்குகழை என்றால் அசைகின்ற மூங்கில். துயல் வரு கழையை அசைகின்ற மூங்கில் என்பர். துளங்கு நாவாய் என்பது அசையும் கப்பல் ஆகும். அலங்குதல், துயலுதல், துளங்குதல் என்ற மூன்ற சொற்களும் அசைவினைக் குறிக்கும். இதுதான் தமிழ்மொழியின் சிறப்பு.

மொழியை என்றும் உயிர்ப்புடன் இயங்கச் செய்ய சொல்லாக்கம் இன்றியமையாதது.

"வரப்புயர நீருயரும்

நீருயர நெல்லுயருமே" என்பதுபோல சொற்களை ஆக்கம் செய்துகொண்டே இருந்தால் மொழியும் என்றும் பீடுநடைபோடும்.

"தொண்டு செய்வாய் தமிழுக்குத்

துறைதோறும் துறைதோறும் துடித்தெழுந்தே"

என்ற பாவேந்தரின் கூற்றைச் செயலாக்குவோம். கலைச்சொல்லாக்கத்தால் தமிழின் எல்லாத் துறைகளையும் வளமாக்குவோம். நிற்க.,

இவ்வியக்ககம் செயற்படுத்திவருகிற கலைச்சொல்லாக்கம் உள்ளிட்ட மொழிக்காப்புப் பணிகளுக்குத் துணைநிற்கும் அகராதியியலாளர்கள், சொல்லாக்க வல்லுநர்கள், மொழியியலாளர்கள், தமிழறிஞர்கள், தமிழார்வலர்கள், ஆய்வாளர்கள், மாணவர்கள் உள்ளிட்ட அனைவருக்கும் இவ்வியக்ககத்தின் சார்பில் நன்றி நவில்கிறேன்.

மலேசியத் தமிழ்நெறிக் கழகத்தின் தேசியத் தலைவர் திரு. இரா. திருமாவளவன் அவர்களின், "தமிழர் மரபொழுங்கைப் பேணுவோம்" என்னும் கட்டுரையும், மேனாள் ஆங்கில விரிவுரையாளர் முனைவர் ஆ. அரிமாப் பாமகன் அவர்களின், "தெறு" என்னும் கட்டுரையும், புதுச்சேரி அரசினர் ஆய்வு நிறுவனத்தைச் சேர்ந்த முனைவர் ப. கொழந்தசாமி அவர்களின், " கொங்கு வழக்காற்றில் தொறப்பு / மாட்டு" என்னும் கட்டுரையும், அகரமுதலி இயக்ககத் தொகுப்பாளர் திரு. கி. இராமர் அவர்களின் "ஏறுதழுவுதல்" என்ற கட்டுரையும் இம்மாதச் "சொல்வயல்" மின்னிதழுக்கு அணிசேர்க்கின்றன. அப்பெருந்தகைகளுக்கு மனமார்ந்த நன்றியை உரித்தாக்குகின்றேன்.

இவ்வியக்ககம் நெறிப்படுத்தும் இணையவழிப்பன்னாட்டுக்கலைச்சொல்லாக்கப் பயிலரங்குகளில் பங்கேற்றுத் தமிழ்க் கலைச்சொற்களை அறிமுகம் செய்து உரையாற்றிய பலதுறை சார்ந்த அனைத்துத் தமிழுள்ளங்களுக்கும், என் உள்ளார்ந்த நன்றியை உரித்தாக்குகிறேன்.

பயிலரங்கங்களுக்கான தொழில்நுட்ப ஒருங்கிணைப்பைச் செய்துவரும் சென்னை வேல்சு அறிவியல் (ம) தொழில்நுட்ப உயர் ஆராய்ச்சி நிறுவனத்தின் தமிழ்த்துறை இணைப் பேராசிரியர் முனைவர் இரா. பன்னிருகைவடிவேலன் அவர்களுக்கும் அகம்நிறை அன்பு நன்றியை உரித்தாக்குகிறேன்.

தமிழ் என்னும் ஒற்றைப்புள்ளியில் ஒருங்கிணைந்த உள்ளத்தினராய் என்றென்றும் ஒருங்கிணைந்து செயலாற்றுவோம்...

செயலால் பேசுவோம்...

# தமிழர் மரபொழுங்கைப் பேணுவோம்


## திரு. இரா. திருமாவளவன்

தேசியத் தலைவர், மலேசியத் தமிழ்நெறிக் கழகம்

மலேசியா




தமிழ் மொழியின் கட்டமைப்பு, படிமுறை சார்ந்தது. நாகரிகம் பெறாத காலத்து மொழி அமைப்புக்கும் நாகரிக வளர்ச்சிக்கேற்ற மொழி அமைப்புக்கும் வளர்ச்சி முதிர்ச்சி வேறுபாட்டைத் தெளிய அறியலாம்...

செப்பமும் ஒழுங்கும் நெறிப்பாடும் மொழியின் நிலைப்பாட்டிற்கு மிக மிக இன்றியமையாதன..இல்லையெனில் மொழி நெறியற்றுத் திரிந்து திசைந்து சிதைந்து போகும்..அவ்வாறு சென்றன... பிறமொழியாய் மாறி விளங்கும் என்பது வரல் ஆறு... கண்ணெதிரே தெற்றெனப் புலப்படும் தெளிவு...

குழந்தை... வளர்ச்சி பெறாத நிலையில் குழந்தையாய்த்தான் பேசும்... அதனை மழலை என மகிழ்ந்து போற்றுவோம்... குழந்தைக்கு மட்டுமே... அச்சிறப்பு... ஆனால் வளர்ந்தவர் முன்பே இப்படித்தானே பேசினேன் ... இப்பொழுது ஏன்... இந்தக் கரடு முரடு என எண்ணி.... குழந்தையின் பாணியில் சோச்சி , சீச்சீ, மம்மம்... எனப் பேசலாமா... பேசினால் என்ன நடக்கும்...

மனைவி கணவனிடம் பா.. பா... சோச்சி ஆ.. ஆ... என்று கூறினால் கணவன் மனைவியை என்னென்று பார்ப்பார்...

ஒரு மொழியின் தோற்றம், கட்டமைப்பு முதலானவற்றை அறிய வேண்டுமானால் மொழியியலை , மொழிநூலியலை நாட வேண்டும்.. அல்லெனில் ஆய்ந்தாரை நாடி அறிவு பெறல் வேண்டும்... ஏன் லகர , ளகர வேறுபாடு, ஏன் ரகர றகர வேறுபாடு எனக் கேட்டுத் தெளிவு பெறல் வேண்டும்... இத்தகு வினாக்களைப் பலரும் கேட்டு.. மொழிநூலாரிடை மொத்தும் கொட்டும் வாங்கியதே மிச்சம்...

தமிழ் மரபில் ஒலிப்பலுக்களில் பொருள் வேறுபாடு உயிராய் இயையும்.. இது மக்களின் இயல்பொலிப்பினை நன்கு ஆய்ந்து தெளிந்த பின்னரே இலக்கணமாய் வரையறுக்கப்பட்டது..

இலக்கியமே முந்தியது.. இலக்கணம் பிந்தியதே.. ஆனால் அந்த இலக்கணம் இலக்கிய இயல்பொழுங்கையே விளக்கி நிற்கும்.

மக்கள் பேச்சு வழக்கில் , அப்பா வராரு என்று சொன்னால் அப்பா வருகிறார்.. என்பதே ஒழுங்கமைப்பு.. இங்குக் காலத்தையும் , திணையுயையும், பாலினையும் , எண்ணையும் சுட்டிச் சொல்ல முடியும்.. காலத்தைக் காட்டும் வினைச்சொல் பேச்சு வழக்கில் எந்தக் காலத்தைக் காட்டியதோ அதே காலத்தைத் தான் இலக்கண ஒழுங்கும் தெளிவுறுத்தும்.. கிறு, கின்று எனும் நிகழ்கால இடைநிலைகளை இலக்கணத்தில் தெளிய பகுப்பாய்வு செய்து தெளிவுறுத்தலாம்...

தமிழின் ஒவ்வொரு சொல்லும் மிக மிக செம்மாந்த முறையில் உருவாகியுள்ளதை... ஆராய்ந்தால் வியப்பு மேலிடும்.. இது மொழிசார் அறிவியல்... இத்துறை வல்லுநர் இத்துறைசார் அறிவியலாளர் ஆவார்.

ஒரு காட்டுக்கு, ஒலிப்புணரியரில் மாற்றங்களை இத்தகு ஆய்வின் வழி உணரலாம்...

முன்பல் நா அமைப்பில் ஏற்படும் புணரியல்

கற்றச்சன்

ல் + த் > ல்த்> ற் > கல் + தச்சன்= கற்றச்சன்

( ல்+ த் + அ ==> ற்ற என்றே ஒலி வரும்)

கடற்கரை

ல் + க் > ல்க் > ல்+க்+ அ > ற்> கடல் + கரை= கடற்கரை

பற்பசை

ல்+ ப் > ல்ப்> ல் +ப் +அ > ற்> பல் + பசை = பற்பசை

கற்சுவர்

ல் + ச் > ல்ச்> ல்+ச் + அ > ற்> கல் + சுவர் = கற்சுவர்

பொற்காசு

ன்+ க் > ன்க் > ன்+ க் + அ > ற் > பொன் + காசு = பொற்காசு

பொற்சரடு
ன்+ச் > ன்ச் > ன்+ச்+அ> ற்> பொன் + சரடு = பொற்சரடு

பொற்றரை
ன் + த் = ன்த் > ன்+த்+அ > ற்ற> பொன் + தரை = பொற்றரை
( ன் + த் + அ ==> ற்ற என்றே ஒலி வரும்)

பொற்பட்டு
ன்+ப்> ன்ப்> ன்+ப்+அ > ற்> பொன் + பட்டு = பொற்பட்டு

இதனைச் சொல்லிப் பார்த்துப் பலுக்கி ஆராயலாம்.

மரபணு, வித்து, வேர், ஆணிவேர், பக்க வேர், கிளை வேர், சல்லி எனக் கிளைத்துப் படர்வது போல்தான் சொல்லும்...

தோன்றல், முற்படல், முன்னுறல், நெருங்கல், கூடல், இயைதல், சுடுதல், குத்தல், துளைத்தல், துருவல், வளைதல் என வேர்ச்சொல் கருத்துகள் பலவாறு கருவுற்றுத் தோன்றிக் கிளைத்துப் பொருளமைந்து விளங்கும்; திலங்கும்..

மக்கள் இயல்பு ஒலிப்பு முறையே மிகச் சரியாக சொற்களின் பொருள் வேறுபாட்டைத் தெளிவுற வகைப்படுத்திக் காட்டும்...

உல்> புல் = கூடல் கருத்து.
உல்> புல்> பல்> பர்> பரு = சேர்தலால் விளைந்த பெருக்கம். இங்கே மூல ஒலிப் பலுப்பு ரகர ஒற்றே.. பொருளும் இதனால் தனித்தது..

ஆயின்..

உல்> சுல்> சில் = எனும் சிறுமைப் பொருள் சிர் என மூல வித்தொலிப்பில் அமையவில்லை.. மக்கள் இயல்பொலிப்பில் சில்> சில்லு, சில்> சிற்று ,
சில் > சிறு என்றே அமைந்து பொருளையும் வேறுபடுத்திக் காட்டியுள்ளது.

இதன் தொடர் பிறப்பு எத்தனை எத்தனையாய்க் கிளைக்கும். ஓர் இடத்தில் சிதைந்தால் முற்றிலும் இடையறவு பட்டு விடும்.

பர்> பர்ரு என அமையாது. ஏன் இடையின ஒலி.. ஒரு போதும்.. முறைமாறாது. அதனை வாய்விட்டுச் சொல்லும் வேளை வலிந்தொலிப்பு ஏற்படாது. ஆனால் பற்று எனபது வன்மை பெற்று அமையும். வல்லொலி வாய்விட்டுச் சொல்லும் போதே இயற்கை ஒழுங்காய் வலிந்தே முறையுற்று அமையும்..

சிலர் ஏன் சிரு என அமையவில்லை என வினா எழுப்புகின்றனர் ... இசை அறிவும் உணர்வும் நாட்டமும் இல்லாதவரைக் காம்போதி இராகத்தைப் பாடுக எனில் எப்படிப் பாடுவரோ அப்படித்தான் இந்த மொழியியல் இலக்கண ஒழுங்கமைப்பை அறியாதவர் சொல்வதும்..

இசையில் சுரம் பிறழ்ந்தும், குரலிடம் பிறழ்ந்தும் சுதி பிறழ்ந்தும் பாட முடியுமா? கழுதை கத்துவதும் இசைதான் எனக் கூறி பாடியது கம்பீர நாட்டை என்றால் இசை அமைப்பாளர் ஏற்பாரா? ஒவ்வோர் அராகத்திற்கும் ஒவ்வோர் சுரவரிசை ஒழுங்குமுறை உண்டுதானே... அதனை முறை மாற்றியும் சிதைத்தும் படிக்கலாமா? ....
எழுதியவன் ஏட்டைக் கெடுத்தான் படித்தவன் பாட்டைக் கெடுத்தான் என்பது போல் ஆகாதா?

எல்லாவற்றுக்கும் ஒரு மரபொழுங்கு, நெறிமுறை, இலக்கணக் கட்டமை உண்டு... இந்தக் கட்டமைப்பே எங்கும், என்றும் எச்சூழலிலும் மக்கள் பேரினத்தின் உயிர்ப்பாய் விளங்கும் மொழி சிதைந்துவிடக் கூடாது என்பதற்கே.. சிதைந்தால்... மொழி அழியும்..

மரபு நிலைத் திரியின் பிறிது பிறிதாகும்...

எனும் தொல்காப்பிய எச்சரிக்கையை உணர்க! தமிழ் மரபொழுங்கைப் பேணுக!

# தெறு!



முனைவர் ஆ. அரிமாப் பாமகன்
மேனாள் ஆங்கில விரிவுரையாளர்
புதுச்சேரி

"காதல் இன்று தீயாய்ப் பொழிகின்றதே!
சோகம் நெஞ்சில் ஆறாய் வழிகின்றதே!
கண்ணீரில் மூழ்கும்
கனவெல்லாம் சாகும்
இளவயதில் சாபம் பாவம்!
காதல் இன்று தீயாய்ப் பொழிகின்றதே!
சோகம் நெஞ்சில் ஆறாய் வழிகின்றதே!"
(இரமேசு, காலாட்படை).

*****

"நீர் மிகின், சிறையும் இல்லை; தீ மிகின்,
மன் உயிர் நிழற்றும் நிழலும் இல்லை;
வளி மிகின், வலியும் இல்லை; ஒளி மிக்கு
அவற்று ஓர் அன்ன; சினப் போர் வழுதி,
'தண் தமிழ் பொது' எனப் பொறாஅன், போர்
எதிர்ந்து,
கொண்டி வேண்டுவன் ஆயின், 'கொள்க'
எனக்
கொடுத்த மன்னர் நடுக்கு அற்றனரே;
அளியரோ அளியர், அவன் அளி இழந்தோரே–
நுண் பல சிதலை அரிது முயன்று எடுத்த
செம் புற்று ஈயல் போல,
ஒரு பகல் வாழ்க்கைக்கு உலமருவோரே!"
(புறநானூறு 51).

பொருள்: சீறி வரும் வெள்ளத்தைத் தடுத்து நிறுத்த வல்லமையுள்ள அணை ஏதுமில்லை. கடுமையாகப் பற்றிப் பரவி வரும் தீயிடமிருந்து உயிரினங்களை மீட்பதற்குத் தடுப்பும் ஏதுமில்லை. மிகுந்து வரும் காற்றை எதிர்த்து நிற்கும் வலிமை யாருக்கும் இல்லை. வெயிலின் பெரு வெளிச்சத்தையும் நம்மால் தடுக்க இயலாது ! அதுபோல, பாண்டிய மன்னன் வழுதியை எதிர்த்து நிற்க இந்த நிலவுலகில் யாரும் இல்லை. தமிழ்கூறும் நல்லுலகம் – தமிழ்நாடு – எல்லா அரசர்களுக்கும் பொது என்பதை அவன் பொறுத்துக்கொள்ள மாட்டான். தமிழ்நாடு முழுவதும் தனக்கே உரியது எனப் போரிடுவான் ! திறை செலுத்த வேண்டும் என்று வழுதி கேட்பானாகில், மறுப்பின்றி ஏற்றுக் கொள்வோர் தொடர்ந்து தமது நாட்டினை ஆட்சி புரியலாம்.. மாறாக , அவனது அரவணைப்பை இழந்துவிட்டால், அத்தகைய மன்னர்கள் மிகுந்த இரக்கத்திற்குரியவர் ஆகிவிடுவர். புற்றிலிருந்து கிளம்பும் ஈயல் ஒருநாள் வாழ்க்கையில் அழிவது போல அவர்களின் வாழ்வும் அழிந்து போகும் !

ஐம்பூத ஆற்றல்களுள் ஒன்றான தீயினால் ஏற்படும் அழிவு கற்பனைக்கெட்டாத கொடுமையாக இருக்கும். அதனாலேயே கெட்ட செயல்கள் தீய செயல்கள் எனப்படுகின்றன போலும்!

"தீயவை தீய பயத்தலால் தீயவை
தீயினும் அஞ்சப் படும்."
(திருக்குறள் 202).

பொழிப்பு: தீயசெயல்கள் தீமையை விளைவிப்பதால், அத் தீய செயல்கள் தீயைவிட மிகையாக அஞ்சத்தக்கன.

"நோம்என் நெஞ்சே! நோம்என் நெஞ்சே!
இமைதீய்ப் பன்ன கண்ணீர் தாங்கி
அமைதற் கமைந்தநங் காதலர்
அமைவிலர் ஆகுதல் நோம்என் நெஞ்சே."
(குறுந்தொகை 4).

உரை: என் நெஞ்சம் வருந்துகிறது; என் நெஞ்சம் வருந்துகிறது. இமைகளைச் சுடும் சூடான என் கண்ணீரைத் துடைத்து, எனக்கு ஆதரவாக இருந்த நம் தலைவர் இப்பொழுது எனக்கு ஆதரவாக இல்லாமல் பிரிந்திருத்தலால், என் நெஞ்சம் வருந்துகிறது.

* தீ – தீய் – தீய்தல் = தீய்ந்துபோதல்; – தீய்த்தல் = தீயினால் சுடுதல், வாட்டுதல், அழித்தல்.

தீயின் கொடிய வெப்பத்தை விளக்குவதாக அமைந்த சொல் தெறு.
தெறு – தெறும் (thermo) – தெறுதல் – தெறுத்தல்..

(அ) தெறு = வெப்பம்.
"விளைவு அறா வியன் கழனி
கார்க் கரும்பின் கமழ் ஆலைத்
தீத் தெறுவின் கவின் வாடி,

நீர்ச் செறுவின் நீள் நெய்தல்
பூச்சாம்பும் புலத்து ஆங்கண்.."
(பட்டினப்பாலை: 8–12).

உரை: விளைச்சல் நீங்கா அகன்ற வயல்களில் கருமை நிறமான முதிர்ந்த கரும்பின் மணமுள்ள பாகைக் காய்ச்சும் ஆலைகளின் நெருப்பின் வெப்பத்தால், அழகு கெட்டு, நீரையுடைய வயல்களில் உள்ள நீண்ட நெய்தல் மலர்கள் வாடும்...

* தெறு = வெப்பம்; செறு = வயல்.

(ஆ) தெறு = சுடு.

"நீங்கின் தெறூஉம் குறுகுங்கால்
தண்ணென்னும்
தீ யாண்டுப் பெற்றாள் இவள்."
(திருக்குறள் 1104).

பொழிப்பு: நீங்கினால் சுடுகின்றது; அணுகினால் குளிர்ச்சியாக இருக்கின்றது; இத்தகைய புதுமையான தீயை இவள் எவ்விடத்திலிருந்து பெற்றாள்?

"வெந் துகள் ஆகிய வெயில் கடம் நீந்தி,
வந்தனம்ஆயினும், ஒழிக இனிச் செலவே!
அழுத கண்ணள் ஆய்நலம் சிதையக்
கதிர் தெறு வெஞ் சுரம் நினைக்கும்,
அவிர் கோல் ஆய்தொடி உள்ளத்துப் படரே."
(ஐங்குறுநூறு 330).

பொருள்: தலைவன் தன் நெஞ்சுக்குச் சொல்கிறான். 'மண்ணைத் துகளாக்கிக்கொண்டிருக்கும் வெயில்! இப்படி வெயில் தாக்கும் காடு! நெஞ்சே! இந்தக் காட்டில் வந்துகொண்டிருக்கிறோம்! அவள் அழுதுகொண்டிருக்கிறாள்! தன் நலமெல்லாம் சிதைந்து அழுதுகொண்டிருக்கிறாள்! நான் வெயில் காயும் காட்டில் செல்கிறேனே என்று நினைத்து அழுதுகொண்டிருக்கிறாள்! என்ன செய்வேன்?'

"தெறு கதிர் உலைஇய வேனில் வெங் காட்டு,
உறு வளி ஒலி கழைக் கண் உறுபு
தீண்டலின்,
பொறி பிதிர்பு எடுத்த பொங்கு எழு கூர் எரிப்
பைது அறு சிமையப் பயம் நீங்கு ஆர் இடை
நல் அடிக்கு அமைந்த அல்ல; மெல் இயல்
வல்லுநள் கொல்லோ தானே எல்லி"
(அகநானூறு 153: 8–13).

உரை: வெயில் 'ஒய்' என்று சுட்டு வருத்தும் காடு. வேனில் காலத்துக் கொடிய காடு. பெருங்ககாற்று வீசும்போது மூங்கில்கள் உரசி அங்குத் தீப் பற்றிக்கொள்ளும். மூங்கிலின் கணுக்கள் உடைந்து தீப் பொறிகள் தெறித்து விழும். உச்சி மலையே பற்றி எரியும். எரிந்த நிலமும் பயனற்றுக் கிடக்கும். அந்த நிலம் காலடி வைத்து நடப்பதற்கு உகந்தது அன்று. அதில் இவளால் நடந்துசெல்ல முடியுமா?

(இ) தெறுநர், தெறுவர் = கொடியன புரியும் பகைவர்.

"தெறுவர்
பேருயிர் கொள்ளும் மாதோ"
(புறநானூறு 307: 9–10).

(ஈ) தெறு = கோபம்.

"நுரைமுகந் தன்ன மென்பூஞ் சேக்கை
அறியாது ஏறிய என்னைத் தெறுவர,
இருபாற் படுக்குநின் வாள்வாய் ஒழித்ததை
அதூஉம் சாலும், நற் றமிழ்முழுது அறிதல்;
அதனொடும் அமையாது, அணுக வந்து, நின்
மதனுடை முழவுத்தோள் ஓச்சித், தண்ணென
வீசி யோயே;..."
(புறநானூறு 50: 7–13).

உரை: எண்ணெய் நுரையை முகந்து வைத்ததுபோல் இருந்த மெல்லிய மலர்க் கட்டிலை முரசுக்கட்டில் என்று அறியாது நான் ஏறிப் படுத்தேன். என் செயலுக்காக என்னைச் சினந்து, இரு கூறாக வெட்டக்கூடிய உன் கூரிய வாளால் வெட்டாமல் விடுத்தாய். நீ தமிழை நன்கு அறிந்தவன் என்பதற்கு அதுவே சான்று. அத்தோடு அமையாமல், என்னை அணுகி, உன்னுடைய வலிய,
முரசு போன்ற தோளை வீசிக் குளிர்ச்சி தரும் வகையில் கவரி விசிறியவனே!

(உ) தெறு– தெறுத்தல் = தண்டஞ்செய்தல்.

"கொடியோர்த் தெறுதலும்,
செவ்வியோர்க்குஅளித்தலும்,
ஓடியா முறையின் மடிவிலை யாகி
நல்லதன் நலனும் தீயதன் தீமையும்
இல்லை என்போர்க்கு இனன் ஆகி லியர்!"
(புறநானூறு 29: 8–12).

* கொடியோர்த் தெறுதல் = கொடியோரைத் தண்டித்தல்.

தெறுபொருள் = வெற்றிகொண்ட பகையரசரிடமிருந்து பெறும் திறைப்பொருள்.

"உறுபொருளும் உல்கு பொருளும் தன் ஒன்னார்
தெறு பொருளும் வேந்தன் பொருள்."
(திருக்குறள் 756).

"வகை தெரி மாக்கள் தொகை பெற்று ஓங்கி
பகை தெறல் அறியாப் பயம் கெழு வீதியும்"
(சிலப்பதிகாரம் 144: 199–200).
* தெறு – தெறல்.

"வன் தெறு பாலையை மருதம் ஆம் எனச்
சென்றது; சித்திரகூடம் சேர்ந்ததால் –
ஒன்றுஉரைத்து, 'உயிரினம் ஒழுக்கம் நன்று' எனப்
பொன்றிய புரவலன் பொரு இல் சேனையே."
(கம்பராமாயணம், அயோ.14, 24).

பொருள்: 'உயிரைவிட நல்லொழுக்கமே சிறந்து விளங்குவது' எனக் கருதி மெய் ஒன்றையே உரைத்து உயிர்விட்ட பேரரசனாகிய தயரதனது ஒப்பற்ற சேனையானது கொடிய அழிக்கவல்ல பாலை நிலத்தை (முன்கூறியவாறு நீரும் நிழலும் பெற்றுக் குளிர்ந்தமையால்) மருதநிலம் ஆகும் என்று கருதிஎளிதாகக் கடந்து சென்று சித்திரகூட மலையை அடைந்தது.

"தீய வார் கணை முதலிய தெறு சின படைகள்"
(கம்ப. ஆரண். 7, 84: 2).

"தீவினை தருபடை தெறு தொழில் மறவோன்"
(கம்ப. யுத். 4, 37, 89: 4).

"தெறுகணை யொன்று தொடுக்கவு முனைந்து
செருச்செய்வோன் சென்னியோ டிருந்தான்,
மறுகணை தொடுப்ப தாண்மையோ வலியோ
மானமோ மன்னவர்க் கறமோ,
வுறுகணை யொன்றே பார்த்தன்மேற் றொடுப்ப
னொழிந்துளோ ருய்வரென் றுரைத்தான்,
தறுகண ரலர்க்குந் தறுகணா னவர்க்குந்
தண்ணளி நிறைந்த செங்கண்ணான்."
(வில்லிபாரதம் 27, 256).

பொருள்: அழிக்கவல்ல கணையை ஒருமுறை தொடுக்கவும், எதிர்த்துப் போர்செய்யும் பகைவன் தலைதுணிக்கப்படாமல் அதனோடு பிழைத்திருந்தால், (அவன்மேல் அந்தக் கணையை) இரண்டாம்முறை விடுப்பது, அரசர்களுக்கு ஆண்மையோ? வல்லமையோ? மானமோ? அறமோ?.....

"தெறு கொலை விளைத்திடல் தீது செய் நெறி"
(சீறாப்புராணம் 2971: 3).

வெம்மை, கோபம், தண்டம்,... எனப் பலவாறாக அச்சுறுத்தும் கொடுமைக்குக் காரணமான 'தெறு' எனும் சொல் 'terror' என்பதுடன் இணைத்து எண்ணத் தக்கதாய் உள்ளது.
தெறுவம் – terrorism.
தெறுவன்/ர் – terrorist.

தெறு > terreur > terror!
terror (n.)
early 15c., "something that intimidates, an object of fear," from Old French terreur (14c.), from Latin terrorem (nominative terror) "great fear, dread, alarm, panic; object of fear, cause of alarm; terrible news," from terrere "fill with fear, frighten," from PIE root *tres– "to tremble" (see terrible).

terrible (adj.)
late 14c., "causing terror, awe, or dread; frightful," from Old French terrible (12c.), from Latin terribilis "frightful," from terrere "fill with fear," from PIE root *tros– "to make afraid" (source also of Sanskrit trasanti "to tremble, be afraid," Avestan tarshta "scared, afraid," Greek treein "to tremble, be afraid," Lithuanian tristi "to tremble, shiver," Old Church Slavonic treso "I shake," Middle Irish tarrach "timid"). Weakened sense of "very bad, awful" is first attested 1590s.

terrorist (n.)
in the modern sense, 1944, especially in reference to Jewish tactics against the British in Palestine – earlier it was used of extremist revolutionaries in Russia who attempted to demoralize the government by terror (1866); and Jacobins during the French Revolution (1795) – from French terroriste; see terror + –ist (also see terrorism).

# கொங்கு வழக்காற்றில் தொறப்பு / மாட்டு



முனைவர் ப. கொழந்தசாமி,
அரசினர் ஆய்வு நிறுவனம், புதுச்சேரி.

தமிழ் வட்டார வழக்குகள் நிறைந்தது. அவற்றுள் கொங்கு வட்டார வழக்கும் ஒன்று. கோவை, நீலகிரி, ஈரோடு, திருப்பூர், சேலம், தருமபுரி, மதுரை மாவட்டங்களை உள்ளடக்கிய பகுதி கொங்கு மண்டலம் ஆகின்றது. இங்கு நீங்க வாங்க என்றவாறு மரியாதை அதிகம். இங்கு, கதவிலிடுகின்ற பூட்டை, தொறப்பு ( திறப்பு > தொறப்பு, அதாவது இ> ஒ ) என்றும், பூட்டின் திறவுகோலை. தொறப்புக் குச்சி எனவும்வழங்குகின்றனர்;

சான்று: அம்மிணி ! தொறப்புக் குச்சியெ எங்க வெச்சே?

அடுத்து, பேச்சு வழக்கில் மாட்டு என்னும் சொல்லை,

1. வினையாக, திட்டு என்னும் பொருளில் ' அவெ கோவப்பட்டு மாட்றே'

2. வினையாக, தொங்கவிடு என்னும் பொருளில் ' சட்டையெ ஆணீலெ மாட்டு'

3. பெயரடையாக, 'மாட்டுப் பால்', ' மாட்டுப் பொங்கல்'

என்று பலபொருட்சொல்லாக ஆள்கின்றனர். தமிழின் சொல்லாக்க / சொல் வளத்தை/ ஒலி மாற்ற மரபை அறிய இத்தகைய வட்டார வழக்குச் சொற்கள் வாய்ப்பாவதோடு, பொதுமக்களின் மொழித்திறனும் புலானாகும்

# ஆழ்ந்த இரங்கல் !



பொறிஞர் உலோ. செந்தமிழ்க்கோதை ஐயா அவர்கள் தமிழக அறிவியல் தொழில்நுட்ப வளர்ச்சி வரலாற்றில் அக்கறை கொண்டவர். அறிவியல் தமிழ் ஆக்கத்தில் கவனம் செலுத்தி, பல கலைச் சொற்களை உருவாக்கியவர். பொறியியல், அறிவியல், மக்கள் அறிவியல், அறிவியல் வரலாற்று வரைவியல், மெய்யியல், சமூகவியல் ஆகிய துறைகளிலும் கட்டுரை எழுதிவந்தவர். திருச்சி பாரதிதாசன் பல்கலைக்கழக அறிவியல், தொழில்நுட்ப ஆய்விதழின் ஆசிரியர் குழுவில் பணியாற்றிய ஐயா அவர்கள், தமிழ் இணையக் கல்விக்கழகம் வெளியிட்ட 14 கலைச்சொல் அகராதி அமைப்பிலும் பங்காற்றியவர்.

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம் வெள்ளிதோறும் நெறிப்படுத்தும் இணையவழிப் பன்னாட்டுக் கலைச்சொல்லாக்கப் பயிலரங்கில் பங்கேற்று எண்ணற்ற தமிழ்க்கலைச்சொல்லாக்கங்களைத் தமிழ்கூறு நல்லுலகிற்கு நல்கியவர். தமது ஆக்கச் சிந்தனையை நிறுத்திக்கொண்ட அன்னாரின் ஆதன் இறைவன் திருவடிகளில் இளைப்பாறட்டும். ஐயாவை இழந்து வாடும் அவரின் குடும்பத்தாருக்கு அகரமுதலி இயக்கக இயக்குநர், அலுவலர்கள் (ம) பணியாளர்கள் சார்பில் ஆழ்ந்த இரங்கலைத் தெரிவித்துக்கொள்கிறோம்.

# ஏறுதழுவுதல்




திரு. கி. இராமர்

தொகுப்பாளர்

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்


வீரத்திற்கும் விளைச்சலுக்கும் செழிப்பிற்கும் செல்வத்திற்கும் தமிழர்களால் அடையாளப்படுத்தப்படுபவை மாடுகள். முல்லை மற்றும் மருத நிலங்களில் கால் கொண்டு தமிழர்தம் வாழ்வோடு பின்னிப்பிணைந்து பண்பாடாகியுள்ளது ஏறுதழுவுதல். ஏறுதழுவுதல் தமிழரின் நாகரிகத்தை உணர்த்தும் விளையாட்டு. இளைஞர்களின் வீரத்தைப் பெருமிதப்படுத்தும் பண்பாட்டு நிகழ்வு. இது, நூற்றாண்டுகள் பல கடந்தும் தமிழர்தம் அடையாளமாகவே நிறுவப்பட்டிருக்கிறது.

பண்பாட்டுத் தொன்மையும் இலக்கிய வளமையும் வாய்ந்தது. தமிழர் வரலாறு, இயற்கையைச் சார்ந்தும் பிற உயிர்களோடு இணைந்தும் வாழ்ந்தனர் சங்க காலத் தமிழர்கள். இதற்கும் சங்க இலக்கியங்களில் ஏராளமான சான்றுகள் உள்ளன. அவற்றுள் ஒன்று ஏறுதழுவுதல் நிகழ்வாகும்.

## இலக்கியங்களில் ஏறுதழுவுதல்

சங்க இலக்கியமான கலித்தொகையில் ஏறு தழுவுதல் பற்றிக் குறிப்பிடப்பட்டுள்ளது.

"எழுந்தது துகள் ஏற்றனர் மார்பு
கவிழ்ந்தன மருப்பு கலங்கினர் பலர்"
(கலி. 102;அடி 21 – 24)

என்று முல்லைக்கலியில் ஏறுதழுவுதல் களம் குறித்த அடிகளைக் காண முடிகிறது.

திமில் பெருத்த காளைகள் மிடுக்குடனும் வீரத்துடனும் போருக்குச் செல்லும் மருத நிலத்துப் போர் வீரர்களை நிகர்த்தனவாக இருந்தன.

"நீறு எடுப்பவை, நிலம் சாடுபவை
மாறுஏற்றுச் சிலைப்பவை, மண்டிப் பாய்பவையாய்
துளங்குஇமில் நல்ஏற்றினம் பல களம்புகும்
மள்ளர் வனப்பு ஒத்தன"
(கலி. 106;அடி 7 – 10)

என்று கலித்தொகை விவரிக்கிறது.

கலித்தொகை தவிர, சிலப்பதிகாரம் முதலான இலக்கியங்களிலும் புறப்பொருள் வெண்பாமாலை என்னும் இலக்கண நூலிலும் ஏறுகோள் குறித்துக் கூறப்பட்டுள்ளது.

ஏறுதழுவுதல் பற்றிப் பிற்காலச் சிற்றிலக்கியங்களுள் ஒன்றான பள்ளு இலக்கியத்திலும் குறிப்புகள் உள்ளன. எருதுகட்டி என்னும் மாடு தழுவுதல் நிகழ்வைக் கண்ணுடையம்மன் பள்ளு பதிவு செய்துள்ளது.

## தொல்சான்றுகள்:

ஏறு தழுவுதல் குறித்த பல நடுகற்கள், புடைப்புச் சிற்பங்கள் தமிழகத்தின் பல்வேறு பகுதிகளில் கண்டறியப்பட்டுள்ளன.

சேலம் மாவட்டத்தில் எருது விளையாடி மரணமுற்றவன் பெயரால் எடுக்கப்பட்ட எருது பொருதார் கல் ஒன்று உள்ளது. கோவுரிச் சங்கன் கருவந்துறையிலே எருது விளையாடி பட்டான் சங்கன் மகன் பெரிய பயலு நட்ட கல்லு என்பது அந்நடுகல் பொறிப்பு. கருவந்துறை என்னும் ஊரில் எருதோடு போராடி இறந்துபட்டவனாகிய சங்கன் என்பவனுக்கு அவனுடைய மகன் பெரிய பயல் எடுத்த நடுகல் என்பது இதன் பொருள்.

கூரிய கொம்புகளும் சிலிர்த்த திமில்களும் கொண்ட மூன்று எருதுகளைப் பலர் கூடி விரட்டுவது போன்ற பண்டைய ஓவியம் நீலகிரி மாவட்டம் கோத்தகிரி அருகேயுள்ள கரிக்கையூரில் காணப்படுகிறது.

திமிலுடன் கூடிய காளையொன்றை ஒருவர் அடக்க முயல்வது போன்ற ஓவியம் மதுரை உசிலம்பட்டி அருகே கல்லூத்து மேட்டுப்பட்டியில் கண்டறியப்பட்டுள்ளது.

தேனி மயிலாடும் பாறை அருகே சித்திரக்கல்புடவில் என்ற இடத்தில் திமிலுடன் கூடிய காளை ஓவியம் கண்டறியப்பட்டுள்ளது.

சிந்துவெளி நாகரிக வரலாற்றிலும் காளை முக்கிய பங்கு வகிக்கின்றது. இம்மக்கள் காளையைத் தெய்வமாக வழிபட்டதை அகழாய்வில் கிடைக்கப்பெற்ற சான்றுகள் வாயிலாக அறிய முடிகிறது. சிந்துவெளி அகழாய்வுகளில் கண்டறியப்பட்ட மாடு தழுவும் கல் முத்திரை ஒன்று தமிழர்களின் பண்பாட்டுத் தொல்லியல் அடையாளமான ஏறுதழுவுதலைக் குறிப்பதாக ஐராவதம் மகாதேவன் தெரிவித்துள்ளார்.

### பண்பாட்டு அடையாளம்

ஏறு தழுவுதல், முல்லை நிலத்து மக்களின் அடையாளத்தோடும் மருத நிலத்து வேளாண்குடிகளின் தொழில்உற்பத்தியோடும் பாலை நிலத்து மக்களின் தேவைக்கான போக்குவரத்துத் தொழிலோடும் பிணைந்தது. இதுவே வேளாண் உற்பத்தியின் பண்பாட்டு அடையாளமாக நீட்சி அடைந்தது.

ஏரில் பூட்டி உழவு செய்ய உதவிய காளை மாடுகள் ஏர் மாடுகள். எருதுகள், ஏறுகள் என்று அழைக்கப்பட்டன. தமிழக உழவர்கள் தங்களின் உழவு சார்ந்த கருவிகளோடு அறுவடைக்குப் பெரிதும் துணை நின்ற மாடுகளைப் போற்றி மகிழ்விக்க ஏற்படுத்திய விழாவே மாட்டுப் பொங்கல். அவ்விழாவன்று மாடுகளைக் குளிப்பாட்டிப் பல வண்ணங்களில் பொட்டிட்டு, மூக்கணாங் கயிறு, கழுத்துக் கயிறு, பிற கயிறு அனைத்தையும் புதிதாக அணிவிப்பர். கொம்புகளைப் பிசிறு சீவி, எண்ணெய் தடவி, கழுத்து மணியாரம் கட்டி, வெள்ளை வேட்டியோ, துண்டோ கழுத்தில் கட்டுவர். பின்னர், பூமாலை அணிவித்துப் பொங்கலிட்டுத் தம்மோடு உழைப்பில் ஈடுபட்ட மாடுகளுக்கு நன்றி தெரிவிக்கும் விதத்தில் தளிகைப் பொங்கலை ஊட்டிவிடுவர்.

இதன் தொடர்ச்சியாக, வேளாண் குடிகளின் வாழ்வோடும் உழைப்போடும் பிணைந்து கிடந்த மாடுகளுடன் அவர்கள் விளையாடி மகிழும் மரபாக உருக்கொண்டதே ஏறுதழுவுதலாகும்.

ஏறு தழுவுதல், தமிழகத்தின் வெவ்வேறு பகுதிகளில் வெவ்வேறு பெயர்களில் அழைக்கப்படுகின்றது. அவை மாடு பிடித்தல், மாடு அணைதல், மாடு விடுதல், மஞ்சுவிரட்டு, வேலி மஞ்சுவிரட்டு, எருதுகட்டி, காளை விரட்டு, ஏறுவிடுதல், சல்லிக்கட்டு எனப் பல பெயர்களில் அழைக்கப்படுகின்றது.

சல்லிக்கட்டு பேச்சுவழக்கில் ஜல்லிக்கட்டு என அழைக்கப்படுகிறது. சல்லி என்பது மாட்டின் கழுத்தில் கட்டப்படுகின்ற வளையம் ஆகும். புளியங்கொம்பினால் வளையம் செய்து காளையின் கழுத்தில் அணிவிக்கும் வழக்கம் தற்போதும் உள்ளது. அக்காலத்தில் புழங்கிக் கொண்டிருந்த சல்லி நாணயங்களைத் துணியில் முடிந்து மாட்டின் கொம்புகளில் கட்டிவிடும் பழக்கமும் இருந்தது. மாட்டைத் தழுவும் வீரருக்கு அந்தப் பணமுடிப்புச் சொந்தமாகும்.

### ஏறு தழுவுதலும் தமிழர் அறமும்

மேலை நாடுகளில் குறிப்பாக, தேசிய விளையாட்டாகக் காளைச் சண்டையைக் கொண்டிருக்கும் இசுபெயின் நாட்டில், காளையைக் கொன்று அடக்குபவனே வீரனாகக் கருதப்படுவான். அவ்விளையாட்டில் ஆயுதங்களைப் பயன்படுத்துவதும் உண்டு.

தமிழகத்தில் நடைபெறும் ஏறு தழுவுதலில் காளையை அடக்குபவர்கள் எந்த ஆயுதத்தையும் பயன்படுத்தக் கூடாது. நிகழ்வின் தொடக்கத்திலும் முடிவிலும் காளைகளுக்கு வழிபாடு செய்வர். எவராலும் அடக்க முடியாத காளைகளும் உண்டு. எனவே, காளைகளும் வெற்றி பெற்றதாகக் கருதப்படும். அன்பையும் வீரத்தையும் ஒருசேர வளர்த்தெடுக்கும் இவ்விளையாட்டில் காளையை அரவணைத்து அடக்குபவரே வீரராகப் போற்றப்படுவர்.

தமிழர்களின் பண்பாட்டுத் திருவிழாவாக விளங்கும் ஏறுதழுவுதல் இரண்டாயிரம் ஆண்டுகள் தொன்மையுடையது.

# தமிழ்க் கலைக்கழகத்தின் 149–ஆவது கூட்டம்




இன்றைய அறிவியல் தொழில்நுட்ப உலகில் நாள்தோறும் பெருகிவரும் பல்வேறு துறைசார்ந்த, பிறமொழிச் சொற்களுக்கு இணையான தமிழ்க்கலைச்சொற்களை உடனுக்குடன் வடிவமைத்து, மக்களின் பயன்பாட்டிற்குக் கொண்டுவரும் நோக்கத்தை அடிப்படையாகக் கொண்டு, தமிழ்நாடு அரசு, தமிழ் வளர்ச்சித் துறை, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் 'தமிழ்க் கலைக்கழகம்' செயற்பட்டுவருகிறது.

மக்களின் பேச்சுவழக்கிலும், ஊடகங்களிலும் காணப்படும் பிறமொழிக் கலைச்சொற்கள் இவ்வியக்ககப் பதிப்பாசிரியர்கள், உதவிப் பதிப்பாசிரியர் மற்றும் தொகுப்பாளர்களால் தொகுக்கப்பட்டு, அவற்றிற்கிணையான தமிழ்க் கலைச்சொற்கள் வடிவமைக்கப்படுகின்றன. அச்சொற்கள் திங்கள் இருமுறை நடைபெறும் தமிழ்க் கலைக்கழகக் கூட்டங்களில் சீராக்கம் செய்யப்பட்டு சொற்குவை வலைத்தளத்தில் பதிவேற்றம் செய்யப்படுகின்றன.

அந்தவகையில் தமிழ்நாடு அரசு தமிழ் வளர்ச்சித் துறை செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலி இயக்ககத்தின் தமிழ்க் கலைக்கழகத்தின் 149–ஆவது கூட்டம் 19.01.2024 ஆம் நாள் அகரமுதலி இயக்ககத்தில், இயக்குநர் முனைவர் கோ. விசயராகவன் தலைமையில் நடைபெற்றது. இந்தக் கூட்டத்தில், தமிழ்வளர்ச்சித்துறை (ம) செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் மேனாள் இயக்குநர் முனைவர் கா.மு. சேகர் மற்றும் அலுவல்சாரா உறுப்பினர்களான புலவர் வெற்றியழகன், முனைவர் கு.பாலசுப்பிரமணியன், முனைவர் இரா.கு. ஆல்துரை, திரு. அ. மதிவாணன், திரு. நா.சு.சிதம்பரம் ஆகியோர் பங்கேற்றனர். மேலும், முனைவர் ஆ.அரிமாப் பாமகன், நூல் மதிப்புரையாளர் கவிஞர் மெய்ஞானி பிரபாகரபாபு மற்றும் அலுவல்சார் உறுப்பினர்கள் கலந்துகொண்டனர். கூட்டத்தில் 220 தமிழ்க் கலைச் சொற்களுக்கு வல்லுநர் குழு ஏற்பளித்துள்ளது.

# தமிழ்க் கலைக்கழகத்தின் 150–ஆவது கூட்டம்




தமிழ்நாடு அரசு, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத் தமிழ்க் கலைக்கழகத்தின் 150–ஆவது கூட்டம் 29.01.2024 ஆம் நாள் நடைபெற்றது. அகரமுதலி இயக்குநர் முனைவர் கோ. விசயராகவன் அவர்கள் தலைமையில் நடைபெற்ற தமிழ்க் கலைக்கழகத்தின் 150–ஆவது கூட்டத்தில், அலுவல்சாரா உறுப்பினர்களான புலவர் வெற்றியழகன், முனைவர் கு. பாலசுப்பிரமணியன், முனைவர் இரா.கு. ஆல்துரை, திரு. அ. மதிவாணன் மற்றும் அலுவல்சார் உறுப்பினர்கள் ஆகியோர் பங்கேற்றனர். இக்கூட்டத்தில் 254 தமிழ்க் கலைச் சொற்களுக்கு வல்லுநர் குழு ஏற்பளித்துள்ளது.

**ஏற்பளிக்கப்பட்ட கலைச்சொற்களுள் சில:**

| | |
|---|---|
| Atrophy Of Uterus – | கருப்பைச் சூம்பல் |
| Backpropagation – | புறங்கூறல் |
| Biocell Therapy – | மயிர்வளர் மருத்துவம் |
| Bountiful Nature – | வளமார் இயற்கை |
| Central Incisor – | நடுவெட்டுப்பல் |
| Conflict Of Interest – | பற்றார்வ முரண் |
| Detective Thriller – | துப்பறியும் திகைப்புக் கதை |
| Empirical Reality – | மெய்யியல்பு |
| Health Club – | உடற்பயிற்சிக் கூடம் |
| Home Wrecker – | குடும்பக் குலைஞன் |
| Hot Glue – | சுடு பசை |
| Knot Nerve – | நரம்பு முடிச்சு |
| Microsome Test – | நுண்ணுடல ஆய்வு |
| Microwave Radio – | நுண்ணலை வானொலி |
| Neutralising Antibody – | நலிவு நீக்கக் காப்பு |
| Non Pecuniary Damage – | பொருள்சாராச் சிதைவு |



## அகரமுதலி இயக்குநர்
### முனைவர் கோ. விசயராகவன் அவர்களுக்குப்
# "பாவாணர் கொள்கை பரப்புநர் விருது!"
### முரம்பு பாவாணர் கோட்டத்தினர் வழங்கிச் சிறப்பித்தனர்!





முரம்பு பாவாணர் கோட்டத்தின் சார்பில், செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்கக இயக்குநர் முனைவர் கோ. விசயராகவன் அவர்களுக்குப் "பாவாணர் கொள்கை பரப்புநர் விருது" வழங்கிச் சிறப்புச் செய்யப்பட்டது.

பாவாணர் கோட்டத்தினர், பாவாணர் பாசறையுள் நடத்திய தேவநேயப் பாவாணரின் 122ஆவது பிறந்தநாள் விழா 09.02.2024ஆம் நாள் வெகு சிறப்பாக நடைபெற்றது.

விழாவின்போது, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககச் சொற்குவை வலைத்தளத்தில் 15 இலட்சத்திற்கும் அதிகமான சொற்கள் பதிவேற்றம் செய்யப்பட்டிருப்பது, முனைவர் கோ. விசயராகவன் அவர்கள் இயக்குநராகப் பொறுப்பேற்று இரண்டரை ஆண்டுகளுக்குள்ளாக மட்டுமே சொற்குவையின் சொல் எண்ணிக்கை 11.25 இலட்சத்திற்கு அதிகமாக உயர்ந்திருப்பது, கல்லூரி மாணவர்களிடையே கலைச்சொல்லாக்கத் திறனை வளர்த்து, சொற்குவை வலைத்தளப் பயன்பாட்டைப் பரவலாக்கம் செய்து, தூயதமிழ்ப் பற்றை விதைக்கும் வகையில், சொற்குவை மாணவத் தூதுவர் பயிற்சித் திட்ட நிகழ்வுகளைக் கல்லூரிகளில் நடத்துவது, கல்லூரி மாணவர்களை அகரமுதலி இயக்ககத்திற்கு வரவழைத்து அகப்பயிற்சி வழங்குவது உள்ளிட்ட பணிகளைப் பாராட்டி, முனைவர் கோ. விசயராகவன் அவர்களுக்குப் "பாவாணர் கொள்கை பரப்புநர் விருது" வழங்கிச் சிறப்பிக்கப்பட்டது.

விழாவில் தமிழறிஞர்கள், பாவாணர் பற்றாளர்கள், பாவாணர் கோட்டத் தலைமைப் பொறுப்பாளர்கள், உறுப்பினர்கள் உள்பட பலர் பங்கேற்றுச் சிறப்பித்தனர்.

# வெங்கமேடு ஊராட்சி ஒன்றிய நடுநிலைப்பள்ளி மாணவர்களுக்கு நற்றமிழ் அறிவோம் நூல் வழங்கல்





செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம் சார்பில், நாமக்கல் மாவட்டம், பரமத்தி வேலூர் வெங்கமேடு பகுதியில் உள்ள ஊராட்சி ஒன்றிய நடுநிலைப்பள்ளி மாணவர்களுக்கு "நற்றமிழ் அறிவோம் என்னும் தூயதமிழ் அகராதி" வழங்கப்பட்டது. பள்ளி மாணவர்களுக்கு "நற்றமிழ் அறிவோம்" நூல்களை வழங்கிப் பேசிய அகரமுதலி இயக்குநர் முனைவர் கோ. விசயராகவன் அவர்கள், "இந்த நூலில் 1 – 5 ஆம் வகுப்பு வரையிலான மாணவர்களுக்கு அவர்களின் வகுப்பு நிலைக்கேற்ப, அன்றாடம் பயன்படுத்தும் பிறமொழிச் சொற்களுக்கு இணையான தூயதமிழ்ச் சொற்கள் உள்ளன. அவற்றையெல்லாம் நீங்கள் நன்கு படித்து, வாழ்க்கையில் பயன்படுத்த வேண்டும். பள்ளிப் பருவத்திலிருந்தே பைந்தமிழ் மீதான பற்றை வளர்த்துக்கொள்ள வேண்டும். அப்போதுதான் வருங்காலத்தில் மொழிக்கலப்பில்லாமல் பேசவும் எழுதவும் முடியும். தாய்மொழியின் மேம்பாடுதான் உண்மையான வளர்ச்சி என்றும், அதற்கு இளைய மாணவத் தலைமுறை உறுதுணை நிற்க வேண்டும்" என்றும் தெரிவித்தார். நிகழ்வில் கலந்துகொண்ட பள்ளி ஆசிரியர்களுக்கு அகரமுதலி இயக்ககம் வெளியிட்டுள்ள "2023 ஆம் ஆண்டுக்கான அகராதி ஆய்வு மலர் " வழங்கப்பட்டது. நிகழ்வில், சென்னை கிறித்துவக் கல்லூரித் தமிழ்த்துறை உதவிப் பேராசிரியர் முனைவர் சு. சதாசிவம், அகரமுதலி தொகுப்பாளர் வே. பிரபு, பதிப்பாசிரியர் கி. தமிழ்மணி உள்ளிட்டோர் கலந்துகொண்டனர்

# வேலூர் கந்தசாமிக் கண்டர் கல்லூரியில் "சொற்குவை மாணவத் தூதுவர்" பயிற்சி





கல்லூரி மாணவர்களிடையே தமிழ்க் கலைச்சொல்லாக்கத் திறனை வளர்த்தல், தூயதமிழ்ப் பயன்பாட்டை ஊக்குவித்தல், சொற்குவை வலைத்தளப் பயனாளர் எண்ணிக்கையைப் பரவலாக்கல் உள்ளிட்ட இலக்குகளின் அடிப்படையில் தமிழ்நாடு அரசின் சீரிய நெறிப்படுத்தலின்கீழ், செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம் சார்பில் "சொற்குவை மாணவத் தூதுவர் பயிற்சித் திட்டம்" செயற்படுத்தப்பட்டுவருகிறது.

அந்தவகையில், தமிழ்நாடு அரசு, தமிழ் வளர்ச்சித் துறை, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம் மற்றும் நாமக்கல் மாவட்டம்– வேலூர் கந்தசாமிக் கண்டர் கல்லூரித் தமிழாய்வுத்துறை இணைந்து நடத்திய 'சொற்குவை' மாணவத் தூதுவர் பயிற்சித் திட்டம், 30.01.2024 ஆம் நாள் முற்பகல் சிறப்பாக நடைபெற்றது. கல்லூரிக் கருத்தரங்கக் கூடத்தில் நடைபெற்ற நிகழ்வில், தமிழ்த்துறைத் தலைவர் மற்றும் இணைப் பேராசிரியர் முனைவர் ந.திலகம் அவர்கள் வரவேற்புரை வழங்க, கல்லூரி, முதல்வர் முனைவர் பொ.சாந்தி அவர்கள் வாழ்த்துரை வழங்கினார். அந்தமான் போர்ட் ப்ளேயர் அந்தமான் தமிழ் இலக்கிய மன்றத்தின் தலைவர் திரு. ஆர்.கோபாலன் அவர்கள் சிறப்புரையாற்ற, சென்னைக் கிறித்தவக் கல்லூரித் தமிழ்த்துறை உதவிப் பேராசிரியர் முனைவர் சு.சதாசிவம் அவர்கள் முதன்மையுரை வழங்கினார். வாணியம்பாடி இமயம் கலை மற்றும் அறிவியல் கல்லூரி உதவிப் பேராசிரியர் முனைவர் ச.சரவணன் அவர்கள் கருத்துரை கூற, தமிழ்நாடு அரசு, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் இயக்குநர் முனைவர் கோ.விசயராகவன் அவர்கள் திட்டச்செயலாக்க உரை ஆற்றினார். அப்போது, தாய்த்தமிழின் முன்னேற்றத்தை இலக்காகக் கொண்டு இளைய தலைமுறையினர் செயலாற்ற வேண்டும் என்று வலியுறுத்தினார். இயக்ககத்தின் தொகுப்பாளர் திரு. வே.பிரபு அவர்கள் திட்ட விளக்கவுரை நிகழ்த்த, வேலூர் அறிஞர் அண்ணா அரசு கலைக்கல்லூரி தமிழ்த்துறை உதவிப் பேராசிரியர் முனைவர் க.பூபதி மற்றும் கோவை கே.எஸ்.ஜி. கலை மற்றும் அறிவியல் கல்லூரித் தமிழ்த் துறைத் தலைவர் திரு செ.நாகராஜன் ஆகியோர் நிறையுரை வழங்கினார். நிறைவாக, கந்தசாமிக் கண்டர் கல்லூரி உதவிப் பேராசிரியர் மற்றும் பயிலரங்க ஒருங்கிணைப்பாளர் முனைவர் இரா.செல்வராஜு அவர்கள் நன்றியுரை கூறினார். நிகழ்வில் கந்தசாமிக் கண்டர் கல்லூரித் தமிழ்த்துறை மேனாள் பேராசிரியர் திரு. தண்டபாணி மற்றும் பேராசிரியர் திரு. அன்பழகன், கல்லூரிப் பேராசிரியர்கள் மற்றும் மாணவ, மாணவிகள் உள்பட ஏராளமானோர் கலந்து கொண்டனர்.

# கரூர், அரசு மகளிர் கலை மற்றும் அறிவியல் கல்லூரியில் "சொற்குவை மாணவத் தூதுவர்" பயிற்சி



அரசு மகளிர் கலை
(ம) அறிவியல் கல்லூரி



தமிழ்நாடு அரசின் தமிழ் வளர்ச்சித்துறை செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம் மற்றும் அரசு மகளிர் கலை மற்றும் அறிவியல் கல்லூரி சார்பில் சொற்குவை மாணவத் தூதுவர் பயிற்சித் திட்டம் என்ற சிறப்பு நிகழ்வு கல்லூரிக் கலையரங்கில் நடைபெற்றது.

இந்நிகழ்விற்கு அரசு கல்வி நிறுவனங்களின் தலைவரும், தமிழ்நாடு ஆசிரியர் கல்வியியல் பல்கலைக்கழகத் துணைவேந்தர் துணைக்குழு உறுப்பினருமான நடேசன் தலைமை உரையாற்றினார். அரசு கல்வி நிறுவனங்களின் செயலாளர் வழக்கறிஞர் கண்ணன், அந்தமான் தமிழ் இலக்கிய மன்றத்தின் செயலாளர் கோபாலன், கல்லூரியின் துணை முதல்வர் இரதிதேவி ஆகியோர்கள் வாழ்த்துரை வழங்கினார்கள். கல்லூ ரியின் தமிழ்த் துறைத் தலைவர் யோகப்பிரியா வரவேற்புரையாற்றினார் . உதவிப் பேராசிரியர் சங்கீதா சிறப்பு விருந்தினரை அறிமுகம் செய்தார். சென்னை, கிறித்தவக் கல்லூரியின் தமிழ்த்துறை உதவிப் பேராசிரியர் சதாசிவம் முதன்மையுரை வழங்கினார்

வாணியம்பாடி, இமயம் கலை அறிவியல் கல்லூரியின் தமிழ்த் துறை உதவிப் பேராசிரியர் சரவணன் கருத்துரை வழங்கினார். தமிழ்நாடு அரசு, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் இயக்குநர் முனைவர் கோ.விசயராகவன் திட்டச் செயலாக்க உரையும், தொகுப்பாளர் வே.பிரபு திட்ட விளக்க உரையும் வழங்கினார்கள். வேலூர் கந்தசாமிக் கண்டர் கல்லூரியின் தமிழ்த்துறை உதவிப் பேராசிரியர் செல்வராஜ், நாமக்கல் அறிஞர் அண்ணா அரசு கலைக் கல்லூரியின் தமிழ்த்துறை உதவிப் பேராசிரியர் பூபதி ஆகியோர் நிறையுரை ஆற்றினர். கல்லூரியின் தமிழ்த் துறை உதவிப் பேராசிரியர் நித்யா நன்றி கூறினார் . மாணவிகளுக்கும், பேராசிரியர்களுக்கும் திட்டச் செயலாக்கத்தின் கையேடும், பயிற்சித் திட்டக் குறிப்புகளும் பயிற்சித் திட்டத்திற்கான சான்றிதழ்களும் வழங்கப்பட்டன.

இந்நிகழ்வை முதுகலைத் தமிழ்த்துறைப் பேராசிரியர்கள் சரண்யா கல்பனா, பூபதி, வரலாற்றுத் துறைப் பேராசிரியர்கள் சுதா, சம்பத்குமார், முத்துக்குமார், விஜயலட்சுமி ஆகியோர் ஒருங்கிணைப்புச் செய்திருந்தனர்.

# சென்னை நடுநிலைப்பள்ளி, நொச்சிக் குப்பம் மழலையர் தொடக்கப்பள்ளி ஆகிய இரு பள்ளிகளில் பயிலும் மாணவர்களுக்கு "நற்றமிழ் அறிவோம் என்னும் தூயதமிழ் அகராதி" வழங்கல்









தமிழ்நாடு அரசு, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம் சார்பில், மயிலாப்பூர், பேராசிரியர் சஞ்சீவி தெருவில் அமைந்துள்ள சென்னை நடுநிலைப்பள்ளி, மற்றும் நொச்சிக் குப்பம் மழலையர் தொடக்கப்பள்ளி ஆகிய இரு பள்ளிகளைச் சேர்ந்த மாணவர்களுக்கு 01.02.2024ஆம் நாள் "நற்றமிழ் அறிவோம் என்னும் தூயதமிழ் அகராதி" வழங்கப்பட்டது. பள்ளி மாணவர்களுக்கு "நற்றமிழ் அறிவோம்" நூல்களை வழங்கிப் பேசிய அகரமுதலி இயக்குநர் முனைவர் கோ. விசயராகவன் அவர்கள், "ஆங்கிலவழிக் கல்வி கற்றாலும் நம்மைப் பெற்ற அம்மாவை அம்மா என்றும் அப்பாவை அப்பா என்றுதான் அழைக்க வேண்டும்....டாடி.. மம்மி என்று அழைக்கச்சொல்லி ஆசிரியர்கள் சொன்னாலும் நீங்கள் கேட்கக் கூடாது.... ஆங்கிலேயர் ஆட்சிக் காலத்தில்தான் நாம் அடிமைப்பட்டோம். நம் நாடு நமதென்று மறந்து போனோம். காரணம், ஆங்கிலேயர் அவர்களின் மொழியை நம்மிடம் திணித்தார்கள். ஆங்கிலம் தெரிந்தால்தான் வேலை என்றார்கள். வயிற்றுப் பிழைப்புக்காக நம்முடைய தாய்மொழி தமிழை மறந்து போனோம். ஆங்கிலம் கலந்து பேசினோம்.... அதனால் நம் தாய்த்தமிழின் தனித்தன்மையை இழந்துபோய் நிற்கிறோம்... இந்நிலையில் நாம் அன்றாடம் பயன்படுத்தும் பொருள்களை.. நம்முடைய சுற்றுச்சூழலில் உள்ள பெயர்களை.... செயற்பாடுகளைத் தமிழில் அழைப்பதற்கான சொற்கள் அடங்கிய அகராதிதான் இந்த நற்றமிழ் அகராதி. இந்த நூலில் 1 – 5 ஆம் வகுப்பு வரையிலான மாணவர்களுக்கு அவர்களின் வகுப்பு நிலைக்கேற்ப, அன்றாடம் பயன்படுத்தும் பிறமொழிச் சொற்களுக்கு இணையான தூயதமிழ்ச் சொற்கள் உள்ளன. எல்லாவற்றிற்கும் தமிழில் சொற்கள் உண்டு என்பதை உங்களுக்கு அறிமுகம் செய்யும் நற்றமிழ் அகராதியை நீங்கள் நன்கு படித்து, வாழ்க்கையில் பயன்படுத்த வேண்டும். பள்ளிப் பருவத்திலிருந்தே பைந்தமிழ் மீதான பற்றை வளர்த்துக்கொள்ள வேண்டும். அப்போதுதான் வருங்காலத்தில் மொழிக்கலப்பில்லாமல் பேசவும் எழுதவும் முடியும். தாய்மொழியின் மேம்பாடுதான் உண்மையான வளர்ச்சி. அதற்கு இளைய மாணவத் தலைமுறை உறுதுணை நிற்க வேண்டும். வணக்கத்தில் தொடங்கி நன்றியில் நிறைவடையும் வகையில் நம் வாழ்க்கையை அமைத்துக்கொண்டால் Good morning – Thanks நம் மொழியிலிருந்து விலகும் " என்றும் தெரிவித்தார்.

நிகழ்வில் கலந்துகொண்ட பள்ளி ஆசிரியர்களுக்கு அகரமுதலி இயக்ககம் வெளியிட்டுள்ள "2023 ஆம் ஆண்டுக்கான அகராதி ஆய்வு மலர்" வழங்கப்பட்டது. நிகழ்வின்போது அகரமுதலி இயக்ககப் பதிப்பாசிரியர் கி. தமிழ்மணி உடனிருந்தார்.

# திருப்பெரும்பதூர் ஒன்றியம், மேவளூர் குப்பம் அரசு தொடக்கப்பள்ளி மாணவர்களுக்கு "நற்றமிழ் அறிவோம் (எ) தூயதமிழ் அகராதி" வழங்கல்





தமிழ்நாடு அரசு, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம் சார்பில், திருப்பெரும்பதூர் ஒன்றியம், மேவளூர் குப்பம் பகுதியில் அமைந்துள்ள அரசு தொடக்கப் பள்ளி மாணவர்களுக்கு "நற்றமிழ் அறிவோம் என்னும் தூயதமிழ் அகராதி" வழங்கப்பட்டது. நூல்களை வழங்கிப் பேசிய அகரமுதலி இயக்குநர் முனைவர் கோ. விசயராகவன் அவர்கள், "விதைகளைப் பழுதின்றிப் பாதுகாத்தால்தான் நாளை நல்ல கனிகள் விளையும். மழலைக் கல்வி முதலே தாய்மொழிப் பற்றை மாணவர்களிடம் விதைத்தால்தான் வருங்காலத்தில் பிறமொழிச் சொற்கள் கலப்பில்லாத நிலையை அடைய முடியும். அதற்கு ஆசிரியர்கள் துணைநிற்க வேண்டும்" என்று கேட்டுக்கொண்டார்.

# சொல்வளம் காப்பதுதான் தமிழ்வளர்ச்சிக்கு அடிப்படை!
# அப்போலோ கல்லூரிக் கருத்தரங்கில்
# அகரமுதலி இயக்குநர் முனைவர் கோ. விசயராகவன் பேச்சு!











சென்னை, பூந்தமல்லியில் அமைந்துள்ள அப்போலோ கலை மற்றும் அறிவியல் கல்லூரியில் தமிழ்த்துறை தொல்காப்பியர் மன்றக் கருத்தரங்கம் 02.02.2024 ஆம் நாள் சிறப்பாக நடைபெற்றது. கல்லூரியின் கருத்தரங்கக் கூடத்தில் நடைபெற்ற நிகழ்வில், தமிழ்த்துறை உதவிப் பேராசிரியர் முனைவர் இரா. ஆனந்தஜோதி அவர்கள் வரவேற்புரை வழங்க, கல்லூரி முதல்வர் முனைவர் ச. சுதாகர் அவர்கள் முன்னிலை வகித்தார்.

தமிழ்த்துறைத் தலைவர் முனைவர் க.முருகேஸ்வரி அவர்கள் தலைமையுரையாற்ற, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்கக இயக்குநர் முனைவர் கோ. விசயராகவன் அவர்கள் சிறப்பு விருந்தினராகக் கலந்துகொண்டு "தமிழ் வளர்ச்சியில் அகரமுதலிச் சொற்குவை" என்னும் பொருண்மையில் சிறப்புரையாற்றினார். அப்போது, "தமிழில் கிடைத்துள்ள மிகத் தொன்மையான ஒல்காப் பெரும்புகழ் தொல்காப்பியம்தான் தமிழ் அகராதியின் தொடக்கப் புள்ளியாக இருக்கிறது. தொல்காப்பியம் இலக்கண நூல் மட்டுமல்ல, ஆகச் சிறந்த மொழியியல் நூலும்கூட. உலக மொழிகளிலேயே ஒலிக்கு இலக்கணம் வகுத்த பெருமை தொல்காப்பியரையே சாரும். தமிழெழுத்துகள் எந்தெந்த உறுப்புகளின் உதவியோடு எந்த இடத்திலிருந்து பிறக்கும் என்று குறித்ததோடு, ஒவ்வொரு எழுத்தும் ஒலிக்கும் கால அளவினையும் மாத்திரை என்ற அளவால் நுட்பமாக எடுத்துரைத்தார். தொல்காப்பியரின் இந்தக் கருத்துகளை இன்றுள்ள பல்வேறு நாட்டு மொழியியல் அறிஞர்களும் வியந்து போற்றிவருகின்றனர். அதேபோல், உயிரினங்களை ஓரறிவு முதல் ஆறறிவு வரை பகுத்துள்ள பாங்கும் உலக மானுடவியல் அறிஞர்கள் போற்றும் வகையில் அமைந்துள்ளது. தொல்காப்பியத்திலுள்ள பல சொற்கள் இன்றளவும் புழக்கத்தில் இருப்பதிலிருந்தே தமிழின் தொன்மையையும் தொடர்ச்சியையும் நாம் அறியமுடியும். தமிழ்மொழியிலுள்ள சொற்களைப் பாதுகாப்பதும், பிறமொழிச் சொற்கலப்பில்லாமல் பேசுவதும்தான் தமிழ்வளர்ச்சிக்கான அடிப்படைப் பணியாகும். சொற்களைக் காக்க காலந்தோறும் அகராதிகள் உருவாக்கப்பட வேண்டும். இன்றைய அறிவியல் காலத்தில் மின்னகராதியாய் இயங்கிவரும் தமிழ்நாடு அரசு, அகரமுதலிச் சொற்குவையில் தமிழ்மொழியின் சங்க இலக்கியச் சொற்கள் தொட்டு இக்காலத்திற்கேற்ற, பல்வேறு துறைசார்ந்த தமிழ்க் கலைச்சொற்கள் வரை 15,11,626 சொற்கள் இதுவரை பதிவேற்றம் செய்யப்பட்டுள்ளன. இச்சொற்களைப் பேராசிரியர்கள், ஆய்வாளர்கள், தமிழறிஞர்கள், இளைய தலைமுறையினர் தவறாது பயன்படுத்துவதோடு, தமிழின் சொல் வளத்தை உயர்த்துவதில் தங்களின் பங்களிப்பையும் நல்கி உண்மையான தமிழ்வளர்ச்சியில் பங்கேற்க வேண்டும்" என்று தெரிவித்தார். பேராசிரியர்கள், மாணவர்கள் உள்பட பலர் பங்கேற்ற கருத்தரங்கில், அகரமுதலித் தொகுப்பாளர் திரு. வே. பிரபு மகிழ்வுரையாற்ற, நிறைவாக, உதவிப் பேராசிரியர் ந. விஜயலட்சுமி அவர்கள் நன்றியுரை கூறினார்.

# புன்னமை தியாகராயர் நாயக்கர் ஊராட்சித் தொடக்கப்பள்ளி மாணவர்களுக்கு "நற்றமிழ் அறிவோம் (எ) தூயதமிழ் அகராதி" வழங்கல்





தமிழ்நாடு அரசு, தமிழ் வளர்ச்சித்துறை, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம் சார்பில், காஞ்சிபுரம் மாவட்டம் (ம) வட்டம் புன்னமை தியாகராயர் நாயக்கர் ஊராட்சி தொடக்கப்பள்ளி மாணவர்களுக்கு 02.02.2024 ஆம் நாள், நற்றமிழ் அறிவோம் என்னும் தூயதமிழ் அகராதி வழங்கப்பட்டது. அகராதிகளை வழங்கிப் பேசிய அகரமுதலி இயக்குநர் முனைவர் கோ. விசயராகவன் அவர்கள், "அகராதியில் உள்ள நல்ல தமிழ்ச் சொற்களை மாணவர்கள் தங்களுடைய இல்லங்களில் பயன்படுத்த வேண்டும். சுற்றுச்சூழலில் உள்ள வாழ்வியல் சொற்களையும் பொருள் உணர்ந்து தமிழில் பேச வேண்டும். அன்றாடம் நாம் பயன்படுத்துகிற பொருட்களின் பெயர்களைத் தமிழில் பொருள் உணர்ந்து, அகராதியில் குறிப்பிடப்பட்டுள்ளவாறு சொற்களைப் பேசி பழக வேண்டும் என்கின்ற ஆர்வத்தைத் தூண்டும் வகையிலும், சிறுவர்களின் கண்ணையும் கருத்தையும் கவரும் வகையிலும் படத்தோடு இந்த அகராதி அச்சடிக்கப்பட்டுள்ளது. நற்றமிழ் அறிவோம் என்ற இந்த அகராதியின் துணைகொண்டு 1–5 வகுப்பு வரை பயிலும் மாணவச் செல்வங்கள் படத்தைப் பார்த்து அதற்கான நல்ல தமிழ்ச்சொல்லைப் பேசி பழகலாம். எல்லாப் பொருள்களுக்கும் எல்லாச் செயல்களுக்கும் தமிழில் சொற்கள் உண்டு.அதனால்தான் உலக மகாகவி பாரதி, "சொல்லில் உயர்வு தமிழ்ச் சொல்லே – அதைத் தொழுது படித்திடடி பாப்பா!" என்று சொன்னார்.இதனைச் இந்தச் சிறு வயதிலேயே மாணவர்கள் புரிந்து கொண்டு அன்றாட வாழ்வியலில் தூய தமிழ்ச் சொற்களைப் பயன்படுத்த வேண்டும் என்பதற்காகவே தமிழ்நாடு அரசின் நற்றமிழ் அறிவோம் அகராதியை அரசுப் பள்ளிகளுக்குச் சென்று வழங்கிக் கொண்டிருக்கிறோம். இன்றைய காலங்களில் ஆங்கிலம் கலக்காமல் தமிழ் பேசுவது என்பது கடினமாக இருக்கும் சூழலில் வருங்கால மாணவச் செல்வங்கள், தமிழில் எல்லாச் சொல்லுக்கும் பொருள் உண்டு என்பதை இந்த அகராதியின் மூலம் தெரிந்து கொள்வார்கள். அதன் பயனாக வருங்காலத்தில் அவர்கள் எந்த மொழியில் கல்விக் கற்றாலும் தன் தாய்மொழியான தமிழில் வாழ்வியல் சூழலுக்கு ஏற்பப் பேசுவார்கள் என்பது உறுதி" என்று தெரிவித்தார்.

# அகரமுதலி இயக்ககத்தில்
# மொழிஞாயிறு பாவாணரின் 122ஆவது பிறந்தநாள் விழா!



தமிழ்நாடு அரசு, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தில் 07.02.2024ஆம் நாள் "மொழிஞாயிறு" தேவநேயப்பாவாணரின் 122ஆவது பிறந்தநாள் விழா சிறப்பாகக் கொண்டாடப்பட்டது. அகரமுதலி இயக்ககத்தில் உள்ள பாவாணரின் திருவுருவச் சிலைக்குத் தமிழறிஞர்கள் மாலை அணிவித்துப் புகழ் வணக்கம் செலுத்தினார்கள். தொன்மைமிகு தமிழ்மொழி தனித்தியங்கும் தன்மைகொண்டது என்பதையும், தமிழுக்கும் உலக மொழிகளுக்குமான சொல்நிலை உறவையும், முந்துதமிழ் உலக மொழிகளுக்கு வழங்கிய சொற்கொடையையும் வேர்ச்சொல்லாய்வின்வழி நிலைநாட்டியவர் "மொழிஞாயிறு" ஞா. தேவநேயப் பாவாணர் அவர்கள்.

அகரமுதலி இயக்கக இயக்குநர் முனைவர் கோ. விசயராகவன் அவர்கள் தலைமையில் நடைபெற்ற தேவநேயப் பாவாணர் அவர்களின் 122ஆவது பிறந்தநாள் நிகழ்வில், புலவர் வெற்றியழகன், எழுத்தாளர் உதயை மூ. வீரையன், புலவர் இரத்தினவேலன், மொழிபெயர்ப்பு வல்லுநர் ஆக்கம் அ. மதிவாணன், வழக்குரைஞர்கள் திரு. பகவத்சிங், திரு. திருமலை தமிழரசன், திரு. அரச எழிலன், திரு. நாகை நாகராசன், திரு. செந்தமிழ்வாணன், திரு. சின்னப்பத்தமிழர், திரு. சந்திரசேகரன், திரு. காஞ்சி அமுதன், திரு. கி.த.ப. திருமாறன், அகரமுதலி இயக்ககப் பதிப்பாசிரியர்கள் முனைவர் மா. பூங்குன்றன், முனைவர் மு. கண்ணன், திரு. சு. வீரவேலு உள்ளிட்ட பைந்தமிழ்ப் பாவாணர் பற்றாளர்கள் கலந்துகொண்டு பாவாணரின் தமிழ்த்தொண்டுகளை நினைவுகூர்ந்தனர். அப்போது, தமிழ்ச் சொல்லாய்வுத் துறையில் அளப்பரும் தொண்டாற்றிய பாவாணரைப் போற்றும் வகையில் அவருக்குத் திருவுருவச் சிலையும், மணிமண்டபமும் அமைப்பதற்கான அறிவிப்பினை வெளியிட்டுள்ளதோடு, தமிழ் அகராதியியல் துறையில் சிறந்து விளங்கும் அகராதி அறிஞர்களுக்கு அகரமுதலி இயக்ககம் வழியாகத் தேவநேயப் பாவாணர் விருது வழங்கி வருகிற தமிழ்நாடு அரசுக்கு நன்றியினைத் தெரிவித்துக்கொண்டார்கள். மேலும், உலக மக்களுக்கெல்லாம் பயன்படும் வகையில், சொற்குவை வலைத்தளத்தில் 15 இலக்கத்திற்கும் மேலாகச் சொற்களைப் பதிவேற்றம் செய்துள்ள அகரமுதலி இயக்ககத்தின் தமிழ்ப்பணிக்கும் வாழ்த்துகளைத் தெரிவித்துக்கொண்டனர். அகரமுதலி இயக்ககத்தில் அகப்பயிற்சி பெற்றுவரும் இராணிமேரி கல்லூரியின் தமிழ்த்துறை மாணவிகள், அகரமுதலி இயக்கக அலுவலர்கள், பணியாளர்கள் உள்ளிட்டோரும் நிகழ்வில் கலந்துகொண்டனர்.

# அகரமுதலி இயக்ககத்தில் அகப்பயிற்சி!
# இராணி மேரி கல்லூரித் தமிழ்த்துறை மாணவிகள் பயன்!



செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தில் அகப்பயிற்சித் திட்டத்தின்கீழ் (Internship programme), சென்னை, இராணி மேரி கல்லூரித் தமிழ்த்துறை மாணவிகளுக்கான அகப்பயிற்சி 29.01.2024 ஆம் நாள் முதல் அகப்பயிற்சி வழங்கப்பட்டது.

08.02.2024 ஆம் நாள் நடைபெற்ற நிறைவு நிகழ்வில் பேசிய அகரமுதலி இயக்குநர் முனைவர் கோ. விசயராகவன் அவர்கள், "தொன்மைமிகு இலக்கண நூலான தொல்காப்பியத்தில் ஒலி–சொல்–மொழி பற்றிய செய்திகளோடு, அகராதியியல் – கலைச்சொல்லாக்கம் – இசை பற்றிய நுட்பமான செய்திகளும் நிறைந்துள்ளன. தமிழ்மொழிக்கும் தமிழர் வாழ்வியலுக்குமான முழுமையான அதிகாரத்தை வழங்கும் பெருமைகொண்ட இரு நூல்கள் திருக்குறளும் தொல்காப்பியமும்தான். தமிழ்மொழிக்குச் செறிவான இலக்கணக் கட்டமைப்பை வகுத்துத் தந்த ஒல்காப் பெரும்புகழ் தொல்காப்பியத்தைத் தமிழர்கள் அனைவரும், குறிப்பாகத் தமிழ்த்துறை மாணவர்கள் தொல்காப்பியத்தை மனம் ஒன்றி, ஊன்றிக் கற்க வேண்டும். வீட்டிலுள்ள குழந்தைகளுக்கு நாம் அன்றாடம் பயன்படுத்தும் பொருட்களுக்கான நல்ல தமிழ்ச் சொற்களைச் சொல்லிப் பழக்கப்படுத்த வேண்டும். அடுத்த தலைமுறை குழந்தைகளுக்காவது அழகிய தமிழ்ப் பெயர்களைச் சூட்டச் செய்ய வேண்டும். தமிழிலேயே தலைப்பெழுத்திட்டுக் கையொப்பமிடுவதை இளைய தலைமுறை மாணவர்கள் கடமையாகக் கொண்டு கடைப்பிடிக்க வேண்டும். சொற்குவை வலைத்தளத்தை அதிகம் பயன்படுத்துவதோடு, சொற்குவையின் பயன்பாட்டை மற்றவர்களுக்கும் எடுத்துரைக்க வேண்டும்" என்று கூறி, அகப்பயிற்சியை நிறைவு செய்த மாணவிகளுக்கு அரசு சான்றிதழ்களை வழங்கிச் சிறப்பித்தார்.

நிகழ்வில், அகப்பயிற்சி ஒருங்கிணைப்பாளர் திருமதி. ஜெ. சாந்தி, அகரமுதலித் திட்ட இயக்கக அலுவலர்கள், பணியாளர்கள் உள்ளிட்டோர் கலந்துகொண்டனர்.

# இராணி மேரி கல்லூரி மாணவிகளின் நன்றிமடல்





தித்திக்கும் தேன்தமிழ் திக்கெட்டும் பரவட்டும். முத்தமிழ்த் தாய்க்கு எங்கள் முதற்கண் வணக்கம்.

"தொண்டு செய்வாய் தமிழுக்குத்
துறைதோறும் துறைதோறும்
துடித்தெழுந்தே"

என்ற பாவேந்தரின் வரிகளுக்கு இணங்க, அனைத்துத் துறைகளிலும்



நாள்தோறும் தமிழை வளர்க்கும் அரும்பணியைச் செவ்வனே செய்துவருகின்ற செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் இயக்குநர் கோ. விசயராகவன் ஐயா அவர்களுக்கும், இந்நல்லதோர் வாய்ப்பிற்கு இசைவளித்த எம் கல்லூரி முதல்வருக்கும், எம்



துறைத்தலைவருக்கும், கணித்தமிழை அறிமுகம் செய்த பிந்து அம்மா அவர்களுக்கும், சொற்குவையின் மாணவத் தூதுவர் பிரபு ஐயா அவர்களுக்கும், எங்களைச் சிறப்பாக ஒருங்கிணைத்து வழிநடத்திய சாந்தி அம்மா அவர்களுக்கும் மற்றும் இவ்வலுவலகத்தில் தமிழ்ப்பணி ஆற்றிவரும்



அனைத்துப் பெருந்தகைகளுக்கும் அன்பு கலந்த வணக்கம்.

தாய்மொழிதான் நமக்கு உயர்மொழி, வேற்றுமொழிகளெல்லாம் கருவி மொழி என்று முதல்நாள் தொடங்கி இன்றுவரை தமிழ் உணர்வு ஊட்டியும் தமிழின் பெருமையை



உலகறியச் செய்ய மொழிபெயர்ப்பு இன்றியமையாதது என அழகுற எடுத்துரைத்தும், தமிழ்தான் உலகின் மூத்தமொழி, தாய்மொழி என நிறுவுவதற்கு அடிப்படையாக அமைந்த பாவாணரின் வேர்ச்சொல் குறித்த அறிமுகம் அளித்தும், சொற்குவை தோன்றிய நோக்கத்தினை



எடுத்துரைத்தும், நாம் அன்றாடம் பயன்படுத்தும் பிறமொழிச் சொற்களுக்குரிய தமிழ்ச்சொற்களை அறியச் செய்தும், தனித்தமிழ் உணர்வினை ஊட்டியும்



ஊக்கப்படுத்தியும் இந்த அகப்பயிற்சி நாள்களை எங்களுக்குச் செம்மையாக அமைத்துக் கொடுத்த இச்செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தைச் சார்ந்த அனைவருக்கும் உள்ளார்ந்த நன்றியினை உரித்தாக்குகின்றோம்.



மொழிஞாயிறு பாவாணரின் 122 ஆவது அகவை நாளன்று இந்த இயக்ககத்தில் நடைபெற்ற சிறப்பு நிகழ்ச்சியில் பங்குகொண்டபோது எந்த அளவிற்கு மகிழ்வாக இருந்ததோ அதே அளவிற்குத் தமிழ்நாட்டில் தனித்தமிழ்தான் இல்லை என்ற நிலை வந்துவிடுமோ என்ற ஐயமும் ஏற்பட்டது.



"ஒரு தாமதம் கூடாதினி உடனே விழி தமிழா" என்று பாவேந்தர் சொன்னது போல இளைய தலைமுறையினராகிய நாங்கள் தனித்தமிழ் உணர்வோடு செயல்பட வேண்டும் என்ற கடப்பாட்டினை உணர்த்தியதாக அன்றைய நிகழ்வு இருந்தது.



இந்தப் பத்துநாள்கள் அகப்பயிற்சியில் ஒவ்வொரு நாளும் எங்களின் அகம் தமிழாலே நிறைந்திருந்தது. எனவே, இந்நல்வாய்ப்பினை நல்கிய அனைவருக்கும் மீண்டும் ஒருமுறை எங்களின் நன்றியை உரித்தாக்குகின்றோம்.



"பட்டினி கிடந்து பசியால் மெலிந்து
பாழ்பட நேர்ந்திடினும்
கட்டி இழுத்துக் கால்கை முறித்து அங்கம்
பிளந்து இழந்து துடித்திடினும் பொங்கு
தமிழைப் பேச மறப்பேனோ..."





என்ற கவிஞர் காசியானந்தனின் வீரவரிகளைக் கூறி நிறைவு செய்கிறோம்.

நன்றி!

# கிருஷ்ணாபுரம் அரசு மேல்நிலைப் பள்ளியில் சொற்குவை மாணவத் தூதுவர் பயிற்சி



தமிழ்நாடு அரசு, தமிழ் வளர்ச்சித் துறை, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்கத்தின் சார்பில் சொற்குவை மாணவத் தூதுவர் பயிற்சித் திட்ட நிகழ்வு கிருஷ்ணாபுரம் அரசு மேல்நிலைப் பள்ளியில் 09.02.2024ஆம் நாள் நடைபெற்றது. இந்நிகழ்ச்சியில் அரசு பள்ளி நூலகத்திற்கு அகரமுதலி இயக்ககம் வெளியிட்ட அகராதிகளும், ஆய்வு மலர் உள்ளிட்ட நூல்களும் வழங்கப்பட்டன. இந்நிகழ்விற்குப் பள்ளியின் தலைமை ஆசிரியர் கே. வீரபாண்டியன் அவர்கள் தலைமையேற்க, பள்ளியின் உதவித் தலைமை ஆசிரியர் மற்றும் தமிழாசிரியர்கள் முன்னிலை வகித்தனர். இந்நிகழ்வில் தமிழ்ப் பாடத்தில் முதன்மை இடங்கள் பெற்ற மாணவர்களுக்குப் பரிசுகளும் பாராட்டுச் சான்றிதழ்களும் வழங்கப்பட்டன. அப்போது, மாணவர்கள் இனி வருங்காலங்களில் நாங்கள் பொது வெளியிலும் எங்கள் இல்லத்திலும் ஆங்கிலம் கலக்காமல் தனித் தமிழில் மட்டுமே பேசுவோம் என்று உறுதியேற்றனர்.

இந்நிகழ்வில் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் இயக்குநர் முனைவர் கோ. விசயராகவன் அவர்கள் சிறப்புரையாற்றினார். அப்போது, திருவில்லிபுத்தூர் என்று சொன்னாலே நம் நினைவுக்கு வருவது தமிழ்நாடு அரசின் இலட்சினையில் இடம் பெற்றிருக்கும் உயர்ந்த 196 அடி உயரம் உள்ள திருவில்லிபுத்தூர் ஆண்டாள் கோவில் கோபுரம்தான். அதன் பிறகு திருவில்லிபுத்தூரில் தமிழாகப் பிறந்து, சங்கத் தமிழினைத் தன் மாலையாக அணிவிக்கும் வகையில் திருப்பாவை எனும் தனித்தமிழ்ப் பாசுரத்தை இயற்றிய பெருமாட்டி ஆண்டாள் அவர்களும் தான். "சொல்லில் உயர்வு தமிழ்ச்சொல்லே அதைத் தொழுது படித்திடடி பாப்பா"என்று மகாகவி பாரதியார் அவர்கள் பேசுவார்.

நாங்களும் அகரமுதலித் திட்ட இயக்கத்தின் சார்பில் பல சொற்களைத் துறைதோறும் தொகுத்து ஆய்ந்து வேர்ச்சொல் கண்டறிந்து அகராதிகளாக வெளியிட்டு வருகிறோம். ஆண்டாள் நாச்சியார் அவர்கள் தனது பாசுரத்தில் "அம்பரமே தண்ணீரே சோறே அறஞ்செய்யும் எம்பெருமான்" என்று தொடங்கும் பாசுரத்தில் பம்பரம் என்று சொன்னால் ஆடை என்கின்ற பொருளும், சோறு என்று சொன்னால் உணவுக்கு முதன்மையாக இருக்கக்கூடிய அரிசியால் ஆகக்கூடிய சோறு என்றும், எம்பெருமான் இவற்றில் எல்லாம் இருக்கிறார் என்று தனித்தமிழ்ச் சொல் எடுத்து பாடி இருப்பதைக் கண்டு தூய தமிழ்ப் பற்றாளர்கள் எல்லாம் மெய்மறந்து போகிறார்கள்.

சங்கத்தமிழ் மாலை முப்பதில் எந்த இடத்திலும் பிறமொழிக் கலப்பு என்பது அறவே இல்லை. இதனால் மாணவச் செல்வங்களே இந்த ஊரைச் சார்ந்த நீங்கள் பெருமைப்பட்டுக் கொள்ளலாம். அருள்திரு ஆண்டாள் உறையும் திருவில்லிபுத்தூர் இந்தக் காலத்தில் மாத்திரமல்ல எந்தக் காலத்திற்கும் தனித்தன்மையைப் பறைசாற்றும் ஊராக இருக்கும். அந்த ஊரில் நாங்கள் வாழ்வதே எங்களுக்குப் பெருமை என்பதை நீங்கள் தோள் தட்டிக் கொண்டாடலாம். மேலும் ஆண்டாள் அவர்கள் தன் திருப்பாவையில் இன்னடிசில் என்று சொல்லைக் கையாளுவார். அடிசிலில் இனிப்பினைச் சேர்த்தால் இன்னடிசில் என்று பொருள் கொள்ளப்படுகிறது.

இன்றைக்கு வழங்குகிற சர்க்கரைப் பொங்கல் தான் நமக்குத் தெரிய வருகிறது. செந்தமிழ்ச் சொற்களும் செவ்வியல் பண்புகளும் உள்ளடங்கிய நூல்தான் ஆண்டாள் அருளிய திருப்பாவை. இந்த நூலில் உள்ள சொற்களை எல்லாம் ஆய்ந்து பார்த்துச் சொற்குவை வலைத்தளத்தில் நாங்கள் பிற மொழிக்கு





இணையான தமிழ்ச் சொற்களாகச் சேர்த்திருக்கிறோம். அம்பரம் என்ற சொல்லுக்கு உயர்வானது, மேலானது, மிகுந்த ஒளியை உடையது காக்கக்கூடியது என்றெல்லாம் வேர்ச்சொல் கண்டறிந்து விளக்கியுள்ளார். அவர் விளக்கிய பொருளுக்கு ஏற்ப தான் அம்பரம் என்றால், மனித இனம் தான் அணிந்து கொள்ளுகிற ஆடை, மானம் காப்பதற்காக உடுத்தப்படுகிறது அந்த ஆடை தான் எம்பெருமானும் எம்பெருமானின் அருள் என்றும் இங்கே பொருள் கொள்ளத் தகும்.



சொற்குவை என்கின்ற வலைத்தளத்தில் சங்க இலக்கியச் சொற்கள் – சங்கம் மருவிய கால இலக்கியச் சொற்கள் தொல்காப்பியச் சொற்கள் – ஐம்பெரும் காப்பியச் சொற்கள் – இக்காலத்தில் புழங்கக்கூடிய பல்வேறு துறை சார்ந்த நூல்களில் காணப்படும் சொற்கள் என எல்லாக்காலச் சொற்களும் தொகுக்கப்பட்டுள்ளன. மேலும் தொகுக்கப்பட்டு வருகின்றன. அதனால் தான் இன்றைக்குச் சொற்குவையினுடைய சொற்களின் எண்ணிக்கை 15 இலட்சத்து 16 ஆயிரம் ஆக விளங்கிக் கொண்டிருக்கிறது.

உலகத்தில் எந்த ஒரு மொழிக்கும் ஒரே வலைத்தளத்தில் இத்தனை இலட்சம் சொற்கள் இல்லை என்பதை எந்த இடத்திலும் எப்பொழுதும் சொல்ல முடியும். அந்த ஒரு சாதனையைத் தமிழ்நாடு அரசு, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்கத்தின் வாயிலாகச் செய்து வருவதை நீங்கள் மனதில் கொண்டு, உங்களுடைய திறன் பேசியில் சொற்குவை வலைத்தளம் என்ற முகவரிக்குச் சென்று அதை முழுமையாகப் பயன்படுத்த வேண்டும். அகராதிகளைத் தேடி நூலகம் செல்ல வேண்டாம். உங்களோடு இருக்கின்ற திறன் பேசியில் அகராதிகள் குவிந்து கிடக்கின்றன. அந்த அகராதிகளில் இருக்கிற சொற்கள் நீங்கள் பயன்படுத்த வேண்டும் என்று உங்களை நோக்கி ஏங்கிக் கொண்டிருக்கின்றன. ஆகவே சொற்குவை வலைத்தளத்திற்கு செல்லுங்கள்... சொற்களை அள்ளி அள்ளிப் பருகுங்கள்... எழுதுங்கள்... பேசுங்கள்... அண்டை வீட்டாருக்கும் உற்றார் உறவினருக்கும் சொற்குவை வலைத்தளத்தை அறிமுகம் செய்யுங்கள். இனிமேல் உங்கள் நாவில் சொல்லப்படுகிற பிறமொழிச் சொல்லுக்குத் தமிழில் சொல் உண்டு என்பதை உணர்ந்து அந்தச் சொல்லைப் பயன்படுத்துங்கள். "சித்திரமும் கைப்பழக்கம் செந்தமிழும் நாப்பழக்கம்" என்பதை நீங்கள் உணர்ந்து செயல்படுங்கள். சொற்குவை நமக்கு இருக்கிறது. இனி, செந்தமிழால் எங்கள் நா மணக்கும்... எங்கள் நா மாத்திரமல்ல எங்கள் இல்லமும் எங்கள் பள்ளியும் மணக்கும் என்று சொல்லி நீங்கள் உறுதிமொழி ஏற்க வேண்டும்.

உலக மொழிகளுக்குத் தாய் மொழியாக விளங்கக்கூடிய நம் தமிழ் மொழி நம் வீட்டு மொழியாக விளங்குவதற்குச் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் அகராதிகளை உங்களைத் தேடி வந்து தந்திருக்கிறோம். உங்கள் செல்பேசியில் இருக்கிற சொற்குவையை அறிமுகம் செய்திருக்கிறோம். அவற்றையெல்லாம் பயன்படுத்தி நாளைய தலைமுறை தமிழோடு வாழ உங்களுடைய உழைப்பும் தமிழ் பற்றும் தேவை... தேவை... தேவை" என்று கூறினார். நிகழ்வில், தொகுப்பாளர் வே. பிரபு அவர்கள், சொற்குவை வலைத்தளச் செயல்பாடு (ம) பயன்படுத்து முறை பற்றி எடுத்துரைக்க, பதிப்பாசிரியர் கி. தமிழ்மணி, கல்விக் கூடத்தின் பொறியாளர் மா. சிவஞானம் உள்ளிட்டோர் கலந்து கொண்டு சிறப்பித்தனர்

# திருச்சிராப்பள்ளி மாவட்டம் வளநாடு கைகாட்டிப் பகுதியிலுள்ள மீனாட்சி விடியல் கலை (ம) அறிவியல் கல்லூரியில் சொற்குவை மாணவத் தூதுவர் பயிற்சி!



தமிழ்நாடு அரசு, தமிழ் வளர்ச்சித் துறை, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம் மற்றும் திருச்சிராப்பள்ளி மாவட்டம் வளநாடு கைகாட்டிப் பகுதியிலுள்ள ஸ்ரீ மீனாட்சி விடியல் கலை மற்றும் அறிவியல் கல்லூரித் தமிழ்த்துறை இணைந்து நடத்திய சொற்குவை மாணவத் தூதுவர் பயிற்சித் திட்ட நிகழ்வு 10.02.2024 ஆம் நாள் நடைபெற்றது. இந்நிகழ்வில் கல்லூரியின் உதவிப் பேராசிரியர் மற்றும் தமிழ்த் துறைத் தலைவர் முனைவர் ச.இரமேஷ் அவர்கள் வரவேற்புரை வழங்க, கல்லூரி நிறுவனத் தலைவர் டாக்டர் ச.தேவராஜ் அவர்கள் தலைமை தாங்கினார். கல்லூரியின் தாளாளர் மற்றும் செயலர் திருமதி. ஷெர்லி தேவராஜ் மற்றும் விடியல் கல்விக் குழுமத்தின் இயக்குநர் திரு. சதீஸ் தேவராஜ் ஆகியோர் முன்னிலை வகித்தனர். கல்லூரி முதல்வர் முனைவர் அ.தோமினிக் அமல்ராஜ் மற்றும் நிருவாக அலுவலர் திரு. ச.ஆராவமுதன் ஆகியோர் கலந்து கொண்டு வாழ்த்துரை வழங்கினார்கள்.



சென்னை, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்கக இயக்குநர் முனைவர் கோ.விசயராகவன் அவர்கள் கலந்து கொண்டு திட்டச் செயலாக்க உரை வழங்கிப் பேசும்போது, "63 நாயன்மார்கள் அருளிய பன்னிரு திருமுறைகளையும், பன்னிரு ஆழ்வார்கள் அருளிய நாலாயிர திவ்வியப் பிரபந்தப் பாசுரங்களையும் மாணவர்கள் மனம் ஒன்றிப் படிக்க வேண்டும். அவ்வாறு படித்தால் பக்தி வளர்வதற்கு முன்னால் பைந்தமிழ்ப் பற்று வளர்ந்து நம் திறம் பெருகும்" என்றார். மேலும், "எல்லாத் துறை சார்ந்த சொற்களும் தமிழ்மொழியில் பொதிந்து நிறைந்து கிடக்கின்றன. அவற்றை மாணவர்கள் படிக்க வேண்டும்.

சான்றாக, அருள்திரு அருணகிரிநாதர் இயற்றிய திருப்புகழில் உள்ள "ஜீமூதம்" என்ற சொல் இடம்பெற்றுள்ளது. அச்சொல் நீருண்ட கார்முகில் போலுள்ள வள்ளியின் கருங்கூந்தலைக் குறிக்கிறது. பக்தி இலக்கியமானாலும் வேறு எந்த படைப்பானாலும் அதில் பிறமொழி எழுத்தாலமைந்த சொற்களோ அல்லது பிறமொழிச் சொற்களோ இருந்தால் அவற்றிற்கு நம்மால் முழுமையான பொருளை விளங்கிக்கொள்ள முடியாது. மாறாக அவற்றிற்குத் தமிழில் சொல்லாக்கினால், தெளிவான பொருள் விளங்குவதோடு மட்டுமல்லாமல் அச்சொல்லுக்கான வேர்ச்சொல்லையும் நம்மால் விளக்க முடியும். பைந்தமிழில் பக்தி இலக்கியங்களைப் படிப்பதனால் இறை உணர்வோடு நம் மனம் ஒன்றுவதை உணரமுடியும். முதன்மைப் பாடமாகத் தமிழைப் படிக்கும் நீங்கள் மக்கள் வாழ்வியலுக்கான அறிவினைப் பெறுவீர்கள். அதனால் மாந்தநேயம் உங்களால் விதைக்கப்படுகிறது. காரணம், தமிழ் மொழியில் பிறப்பு முதல் இறப்பு வரை அனைத்து நிலைகளுக்கும் தேவையான எல்லா அறிவுகளும் சமூக அறிவியலாகச் சங்கப்பாடல்கள் முதல் இக்காலப் படைப்புகள் வரை நிறைந்திருப்பதை மறுக்க முடியாது. அதேபோல், சொற்களுக்கு வேர்ச் சொல் உள்ள மொழி நம் தமிழ்மொழி. அவற்றையெல்லாம் மாணவர்கள் நன்கு படிக்க வேண்டும். சொற்குவை வலைத்தளத்தைத் தொடர்ந்து பயன்படுத்த வேண்டும்"என்றார். இந்நிகழ்வில் அகரமுதலி இயக்ககத் தொகுப்பாளர் திரு. வே. பிரபு, திட்ட விளக்கவுரையாற்ற, நிகழ்வின் நிறைவில் கல்லூரி உதவிப் பேராசிரியர் முனைவர் தா.ரெக்ஸ் சோபியா அவர்கள் நன்றியுரை கூறினார். நிகழ்வை, கல்லூரி உதவிப் பேராசிரியர் திரு. ஆ. பழனிச்சாமி மற்றும் திருமதி அ.செந்தமிழ்ச்செல்வி ஆகியோர் தொகுத்து வழங்கினார்கள். இந்நிகழ்வில் கல்லூரிப் பேராசிரியர்கள், மாணவ – மாணவிகள் பலர் கலந்து கொண்டனர்

# அகரமுதலி இயக்ககம் நெறிப்படுத்தும் பன்னாட்டுக் கலைச்சொல்லாக்கப் பயிலரங்கம்!

"நன்று தமிழ் வளர்க! தமிழ்
நாட்டினில் எங்கணும் பல்குக! பல்குக!
என்றும் தமிழ் வளர்க – கலை
யாவும் தமிழ்மொழியால் விளைந்தோங்குக"

– பாவேந்தர் பாரதிதாசன்

தமிழ்நாடு அரசின் சீரிய நெறிப்படுத்தலின்கீழ், செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தால் 2021 அக்டோபர் 1ஆம் நாளிலிருந்து வெள்ளிதோறும் இணையவழிப் பன்னாட்டுக் கலைச்சொல்லாக்கப் பயிலரங்கம் நடத்தப்பெறுகிறது. இப்பயிலரங்கத்தின் 115–116 அமர்வுகள் 2024 சனவரி 12, 30 ஆகிய நாள்களில் நடைபெற்றன.

இன்றைய அறிவியல் தொழில்நுட்ப உலகில் நாள்தோறும் பெருகிவரும் பல்வேறு துறைசார்ந்த, பிறமொழிச் சொற்களுக்கு இணையான தமிழ்க்கலைச்சொற்களை உடனுக்குடன் வடிவமைத்து, மக்களின் பயன்பாட்டிற்குக் கொண்டுவருவது தமிழ்மொழியின் சொல்வள மேம்பாட்டிற்குரிய முகாமையான பணியாகும்.

புறநிலையில் உள்ள சொல்லாக்க வல்லுநர்களிடமிருந்தும் பல்வேறு துறைசார்ந்த கலைச்சொற்களைப் பெற்று, ஆய்ந்து சொற்குவையில் சேர்த்து, தமிழின் கலைச்சொல் வளத்தை உயர்த்தும் நோக்கில் நடத்தப்பெறும் இப்பயிலரங்க அமர்வுகளில் அயல்நாட்டு அறிஞர்கள், உள்நாட்டு அறிஞர்கள் பங்கேற்று பல்வேறு துறைசார்ந்த தமிழ்க் கலைச்சொற்களை அறிமுகம் செய்து உரையாற்றினர்.

சொல்லாய்வாளர்கள், சொல்லாக்க அறிஞர்கள், தமிழார்வலர்கள், ஆய்வாளர்கள், பேராசிரியர்கள் உள்ளிட்ட பலர் பங்கேற்றும் பார்த்தும் பயன்பெற்றனர். கலைச்சொற்களை அறிமுகம் செய்த சொலாக்க அறிஞர்களுக்கும், பங்கேற்பாளர்களுக்கும் இயக்ககத்தின் சார்பில் பாராட்டுச் சான்றிதழ்களும் பங்கேற்புச் சான்றிதழ்களும் வழங்கப்பட்டன.

அமர்வுகளில் பங்கேற்கும் அறிஞர்களின் ஒருங்கிணைப்பினைப் பாரிசு பன்னாட்டு உயர்கல்வி தமிழாய்வு நிறுவன இயக்குநர் முனைவர் பேரா. ச. சச்சிதானந்தம் அவர்களும், தொழில்நுட்ப ஒருங்கிணைப்பினைச் சென்னை வேல்சு அறிவியல் (ம) தொழில்நுட்ப உயர் ஆராய்ச்சி நிறுவனத்தின் தமிழ்த்துறை இணைப் பேராசிரியர் முனைவர்

இரா. பன்னிருகைவடிவேலன் மற்றும் இயக்கக உதவிப் பதிப்பாசிரியர் திரு. ஏ. காந்தி ஆகியோரும் மேற்கொண்டனர்.

## 12.01.2024 ஆம் நாள் நடைபெற்ற பயிலரங்க நிகழ்வில் கலைச்சொற்களை அறிமுகம் செய்த அறிஞர்கள்

**மரு. விக்டர் ஜோன் பிகுராடோ**
கனடா





**பொறிஞர்**
**உ.லோ. செந்தமிழ்க் கோதை**
அறிவியல் எழுத்தாளர்,
சென்னை

**முனைவர் ப. கமலரூபன்**
ஆராய்ச்சியாளர், இங்கிலாந்து



## 30.01.2024 ஆம் நாள் நடைபெற்ற பயிலரங்க நிகழ்வில் கலைச்சொற்களை அறிமுகம் செய்த அறிஞர்கள்

**திரு. இரா. திருமாவளவன்**
தேசியத் தலைவர்,
மலேசியத் தமிழ்நெறிக் கழகம்
மலேசியா





**திருமதி**
**கிருஷ்ணலதா வசீகரன்**
கலை பண்பாட்டுச் சமூகச்
செயற்பாட்டாளர்
கலை பண்பாட்டுச்
சமூக அலுவலகம்
ஜெனீவா, சுவிட்சர்லாந்து

**முனைவர் மெய். சித்ரா**
தலைவர்,
தமிழ்ப் பண்பாட்டு இயக்கம்,
ஆங்காங்





**திரு. அகநம்பி (எ)**
**தி. பாலசுப்பிரமணியன்**
எழுத்தாளர், வெளியீட்டாளர்
சென்னை

# அறிஞர்கள் வழங்கிய கலைச்சொற்களுள் சில...

**மரு. விக்டர் ஜோன் பிகுராடோ**

| | |
|---|---|
| Pitch mark | பந்தடையாளம் |
| Stroke | வீச்செண் |
| Albatross | மூமுந்தல் |

**முனைவர் ப. கமலரூபன்**

| | |
|---|---|
| model repository | படிமக் களஞ்சியம் |
| deep learning algorithm | தரவுவழி ஆழ்கற்றல் |
| model deployment | படிமப் பயனுறுத்தல் |

**பொறிஞர் உ.லோ. செந்தமிழ்க் கோதை**

| | |
|---|---|
| Super fluids | மீப் பாய்மங்கள் |
| Super solids | மீத் திண்மங்கள் |
| Time crystal | காலப்படிகம் |

**திரு. இரா. திருமாவளவன்**

| | |
|---|---|
| Liner brush | கோட்டுத் தூரிகை |
| Equinophobia | குதிரையச்சம் |
| Coulrophobia | கோமாளியச்சம் |

**முனைவர் மெய். சித்ரா**

| | |
|---|---|
| Snowsnake game | பனிப்பாம்பாட்டம் |
| Chunkey | வட்டெட்டியெறியாட்டம் |
| Doubleball game | இணைப்பந்தாட்டம் |

**திருமதி கிருஷ்ணலதா வசீகரன்**

| | |
|---|---|
| Aquaculture | நீர்வேளாண்மைச் செய்முறை |
| Climate debt | காலநிலைச் செலவு / காலநிலைக் கடன் |
| Solastalgie | காலநிலைமாற்றக் கவலை |

**திரு. அகநம்பி (எ) தி. பாலசுப்பிரமணியன்**

| | |
|---|---|
| Farthings | துளைச் செப்புக்காசு |
| Bi and Cong | இரு பயன் கருவி |
| Tremissis | தூய பொற்காசு |

# செய்தி நறுக்குகள்


India's No1 English Evening Daily
EVENING TAMIL NADU

மாலை தமிழகம்

Maalai Tamizhagam
www.maalaitamizhagam.com
Evening Tamil Daily
e-mail: maalaitamizhagam@gmail.com

சென்னை Chennai 23-1-2024 | செவ்வாய்க்கிழமை (தை 9) | வெளியூர் Out Station 24-1-2024 | Volume - 14 Issue - 301 | பக்கம் Page 6 | விலை Price ₹ 3


## தமிழ் மொழியை பாதுகாக்க வேண்டிய பொறுப்பு மாணவர்களுக்கு உள்ளது: கோ.விசயராகவன்



கல்பாக்கம், ஜன. 23-

தமிழக அரசு, தமிழ் வளர்ச்சித் துறை, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் அகப் பயிற்சித் திட்டத்தின்கீழ், சென்னை, இலயோலா கல்லூரித் தமிழ்த்துறை மாணவர்களுக்கான அகப் பயிற்சி கடந்த மாதம் 18ம் நாள் தொடங்கி இம்மாதம் 13ம் நாள் வரை ஒரு மாத காலம் நடைபெற்றது. அகரமுதலி இயக்ககத்தின் சார்பாக திங்கள்தோறும் நடத்தப்பட்டுவரும் இந்த பயிற்சியில்

சொற்குவை வலைத் தளத்தின் பயன்பாடு, கலைச்சொல்லாக்கத்தின் தேவை, மொழிக்காப்பில் அகராதிகளின் பங்கு, பிறமொழிக் கலப்பின்றித் தமிழில் பேசுதல் குறித்த விழிப்புணர்வை மேற் கொண்டு வரும் நிலையில் பயிற்சி நிறைவு நாளில் அகரமுதலி இயக்குநர் முனைவர் கோ. விசயராகவன் சிறப்பு அழைப்பாளராக கலந்து கொண்டு உரையாற்றினார். அவர் பேசும்போது, "இளைய தலைமுறை மாணவர்கள், தாய்மொழி நம் எண்ணத்தின் முதல் மொழி தமிழ்மொழி, என்பதை உணர வேண்டும். எனவே மாணவர்கள் பிற மொழியிலிருந்து நம் தாய்மொழியை பாதுகாக்க வேண்டியது இளைஞர்களின் பங்காக கருதவேண்டும். அதற்கு இத்தகைய பயிற்சி வகுப்புகள் பயன்படும்," என்றார்.

இந்த நிகழ்ச்சியில் முன்னாள் தமிழ் வளர்ச்சித் துறை இயக்குனர் கா.மு. சேகர் கலந்து கொண்டு மாணவர்களை வாழ்த்தினார்.

திட்ட ஒருங்கிணைப்பாளர் வே.பிரபு, அகரமுதலி இயக்கக அலுவலர்கள் (ம) பணியாளர்கள் உள்பட பலர் கலந்து கொண்டனர். பயிற்சியில் கலந்து கொண்ட மாணவர்களுக்கு சான்றிதழ் மற்றும் அகரமுதலி இயக்கக வெளியீட்டு நூல்கள் வழங்கப்பட்டன.

# மாலை மலர்

இந்தியாவின் No.1 மாலை நாளிதழ்

MAALAI MALAR

திருச்சி 31-1-2024 (புதன்கிழமை) 8 பக்கம் ₹ 5 ★

TRICHY 31-1-2024 (WEDNESDAY) 8 PAGES ₹5

மலர் 47 இதழ் 47

VOL: 47 ISSUE: 47




அரசு மகளிர் கலை மற்றும் அறிவியல் கல்லூரி இணைந்து சொற்குவை மாணவத் தூதுவர் பயிற்சி திட்டம் சிறப்பு நிகழ்வு நடைபெற்ற போது எடுத்த படம்.

### கரூர் அரசு மகளிர் கலை மற்றும் அறிவியல் கல்லூரியில்

## மாணவத் தூதுவர் பயிற்சி திட்டம்

வேலாயுதம் பாளையம்,ஜன.31–

தமிழ்நாடு அரசின் தமிழ் வளர்ச்சித் துறை செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம் மற்றும் அரசு மகளிர் கலை மற்றும் அறிவியல் கல்லூரி இணைந்து சொற்குவை மாணவத் தூதுவர் பயிற்சி திட்டம் என்ற சிறப்பு நிகழ்வு கல்லூரி கலையரங்கில் நடைபெற்றது.

இந்நிகழ்விற்கு அரசு கல்வி நிறுவனங்களின் தலைவரும், தமிழ்நாடு ஆசிரியர் கல்வியியல் பல்கலைக்கழக துணை வேந்தர் துணைக் குழு உறுப்பினருமான நடேசன் தலைமை உரையாற்றினார். அரசு கல்வி நிறுவனங்களின் செயலாளர் வழக்கறிஞர் கண்ணன், அந்தமான் தமிழ் இலக்கிய மன்றத்தின் செயலாளர் கோபாலன், கல்லூரியின் துணை முதல்வர் ரதிதேவி ஆகியோர்கள் வாழ்த்துரை வழங்கினார்கள். கல்லூரியின் தமிழ்த்துறைத் தலைவர் பேராசிரியர் கப்பிரியா வரவேற்புரையாற்றினார். உதவிப் பேராசிரியர் சங்கீதா சிறப்பு விருந்தினரை அறிமுகம் செய்தார். சென்னை கிறிஸ்தவக் கல்லூரியின் தமிழ்த் துறை உதவிப் பேராசிரியர் சதாசிவம் முதன்மையுரை வழங்கினார். வாணியம்பாடி இஸ்லாமியா கலை அறிவியல் கல்லூரியின் தமிழ்த் துறை உதவிப் பேராசிரியர் சரவணன் கருத்துரை வழங்கினார். சென்னை செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் இயக்குனர் விஜயராகவன் திட்ட செயலாக்க உரையும் தொகுப்பாளர் பிரபு திட்ட விளக்க உரையும் வழங்கினார்கள். வேலூர் கந்தசாமிக் கண்டர் கல்லூரியின் தமிழ்த் துறை உதவிப் பேராசிரியர் செல்வராஜ், நாமக்கல் அறிஞர் அண்ணா அரசு கலைக் கல்லூரியின் தமிழ்த் துறை உதவிப் பேராசிரியர் பூபதி ஆகியோர்கள் நிறைவுரை ஆற்றினர். கல்லூரியின் தமிழ்த் துறை உதவிப் பேராசிரியர் நித்யா நன்றி கூறினார். திட்ட செயலாக்கத்தின் கையேடும் பயிற்சி திட்ட குறிப்புகளும் மாணவிகளுக்கும், பேராசிரியர்களுக்கும் பயிற்சி திட்டத்திற்கான சான்றிதழும் வழங்கப்பட்டது.

இந்நிகழ்வை முதுகலைத் தமிழ்த்துறை பேராசிரியர்கள் சரண்யா கல்பனா, பூமதி வரலாற்று துறை பேராசிரியர்கள் சுதா, சம்பத்குமார், முத்துக்குமார், விஜயலட்சுமி ஆகியவர்கள் ஒருங்கிணைப்பு செய்தனர்.

பெரம்பலூர் தலைமை... கூட்டரங்கில் இந்திய மரு... நிர்வாகிகள் பதவியேற்பு வி...

இந்திய மருத்துவ சங்க... ஒருமனதாக தேர்தெடுக்கப்ப... டாக்டர் வல்லபன், செய... பொருளாளராக டாக்டர்... தேர்ந்தெடுக்க ப்பட்டுள்ள... பதவியேற்பு விழாவிற்கு க... வகித்து புதிய நிர்வாகிகளை... சுதாகர், விஜய் ஆனந்த் ஆகி... பேசினார். டி.ஆர்.ஓ. வ... செல்வராஜ், ராஜேஷ் உட்... டாக்டர்கள் பலர் கலந்துகொ...

தினமணி

# தொடக்கக் கல்வி முதலே தமிழ்ப் பற்றை ஊட்டுங்கள்

## அகரமுதலி இயக்குநர் வலியுறுத்தல்

**சென்னை, பிப். 1:** தொடக்கக் கல்வி முதலே மாணவர்களுக்கு ஆசிரியர்கள் தமிழ்ப் பற்றை ஊட்ட வேண்டும் என அகரமுதலித் திட்ட இயக்குநர் கோ.விசயராகவன் வலியுறுத்தினார்.

தமிழக அரசின் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம் சார்பில், மயிலாப்பூர் பேராசிரியர் சஞ்சீவி தெருவில் அமைந்துள்ள சென்னை நடுநிலைப் பள்ளி, நொச்சிக் குப்பம் மழலையர் தொடக்கப் பள்ளி ஆகிய இரு பள்ளிகளைச் சேர்ந்த மாணவர்களுக்கு 'நற்றமிழ் அறிவோம்' என்னும் தூயதமிழ் அகராதி வியாழக்கிழமை வழங்கப்பட்டது.

பள்ளி மாணவர்களுக்கு அகராதிகளை அகரமுதலி இயக்குநர் கோ.விசயராகவன் வழங்கி பேசியது:

ஆங்கிலேயர் ஆட்சிக் காலத்தில்தான் நாம் அடிமைப்பட்டோம். நம் நாடு நமதென்று மறந்து போனோம்.

காரணம், ஆங்கிலேயர்கள் தங்களது மொழியை நம்மிடம் திணித்தார்கள். ஆங்கிலம் தெரிந்தால்தான் வேலை என்றார்கள். வயிற்றுப் பிழைப்புக்காக நம்முடைய தாய்மொழி தமிழை மறந்து போனோம். ஆங்கிலம் கலந்து பேசினோம்; அதனால் நம் தாய்த் தமிழின் தனித்தன்மையை இழந்து நிற்கிறோம்.

நாம் அன்றாடம் பயன்படுத்தும் பொருள்கள், நம்முடைய சுற்றுச்சூழலில் உள்ள பெயர்களை, செயல்பாடுகளைத் தமிழில் அழைப்பதற்கான சொற்கள் அடங்கிய அகராதிதான் இந்த நற்றமிழ் அகராதி.

இந்த நூலில் 1 – 5 ஆம் வகுப்பு வரையிலான மாணவர்களுக்கு அவர்களின் வகுப்பு நிலைக்கேற்ப, அன்றாடம் பயன்படுத்தும் பிறமொழிச் சொற்களுக்கு இணையான தூயத் தமிழ்ச் சொற்கள் உள்ளன. எல்லாவற்றுக்கும் தமிழில் சொற்கள் உண்டு என்பதை உங்களுக்கு அறிமுகம் செய்யும் நற்றமிழ் அகராதியை நீங்கள் நன்கு படித்து, வாழ்க்கையில் பயன்படுத்த வேண்டும்.

பள்ளிப் பருவத்திலிருந்தே பைந்தமிழ் மீதான பற்றை வளர்த்துக்கொள்ள வேண்டும். அப்போதுதான் வருங்காலத்தில் மொழிக் கலப்பில்லாமல் பேசவும் எழுதவும் முடியும் என்றார் அவர்.

இந்த நிகழ்ச்சியின்போது அகரமுதலி இயக்ககப் பதிப்பாசிரியர் கி. தமிழ்மணி உடனிருந்தார்.

# செய்தி நறுக்குகள்

தினமணி

திங்கள்கிழமை
29 ஜனவரி 2024
சென்னை

# சொற்குவையில் 15 லட்சம் சொற்கள் பதிவேற்றம்

## அகரமுதலித் திட்ட இயக்ககம் தகவல்

**சென்னை, ஜன. 28:** தமிழக அரசின் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம் உருவாக்கிய சொற்குவை தளத்தில் பதிவேற்றம் செய்யப்பட்ட கலைச் சொற்களின் எண்ணிக்கை தற்போது 15 லட்சம் என்ற இலக்கை எட்டியுள்ளது.

குறிப்பாக கடந்த இரண்டரை ஆண்டுகளில் மட்டும் 11 லட்சத்துக்கும் மேற்பட்ட கலைச் சொற்கள் இந்த தளத்தில் பதிவேற்றம் செய்யப்பட்டுள்ளது.

செந்தமிழ் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம் சார்பில் அகராதி உருவாக்கம், கலைச்சொல் உருவாக்கம், வட்டார வழக்கு சொற்கள் தொகுப்பு போன்ற பணிகள் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன.

அதன்படி, தற்காலத்தில் உருவாகும் புதிய துறைகளில் வழங்கப்படும், புதிய கலைச் சொற்களுக்கு இணையான தமிழ்ச் சொற்கள் உருவாக்கப்படுகிறது. அவை, வல்லுநர்களின் ஒப்புதலுக்குப் பின் 'சொற்குவை டாட் காம்' எனும் இணையதளத்தில் பதிவேற்றம் செய்யப்படுகிறது. இந்தத் தளத்தில் பதிவேற்றம் செய்யப்பட்ட கலைச் சொற்களின் எண்ணிக்கை தற்போது 15 லட்சத்தை கடந்துள்ளது.

இது குறித்து அகரமுதலித் திட்ட இயக்குநர் கோ.விசயராகவன் கூறியது: தமிழில் ஏற்கெனவே இருக்கின்ற எல்லாச் சொற்களையும் பதிந்து பாதுகாத்தல், இன்றைய காலத்துக்கேற்ப புதுப்புதுக் கலைச்சொற்களையும் உருவாக்கிப் புழக்கத்துக்குக் கொண்டுவருதல் என்ற இரு முதன்மைப் பணிகளையும் தாய்மொழியின் மேன்மைக்கான பணியாகக் கொண்டு செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம் செயலாற்றுவதன் வெளிப்பாடுதான் சொற்குவையின் சொல் உயர்வு.

கடந்த 2019– ஆம் ஆண்டு சொற்குவைக்கென்று தனியாக வலைதளம் (www.sorkuvai.com) „ தொடங்கப்பெற்றது. இந்த வலைதளத்தில் 22.08.2021– ஆம் நாள் வரையில் 3 லட்சத்து 91,682 சொற்கள் பதிவேற்றம் செய்யப்பட்டிருந்தன.

இதையடுத்து தமிழக அரசு மேற்கொண்ட முயற்சிகளால் இந்தத் தளத்தில் சிறந்த கலைச் சொற்களை பதிவேற்றம் செய்யும் பணி தீவிரமாக மேற்கொள்ளப்பட்டு வருகிறது. அந்த வகையில் கடந்த இரண்டரை ஆண்டுகளில் மட்டும் 11 லட்சத்துக்கும் மேற்பட்ட கலைச் சொற்கள் பதிவேற்றம் செய்யப்பட்டன. தற்போது இந்த தளத்தில் உள்ள கலைச் சொற்களின் எண்ணிக்கை 15 லட்சத்து 8,213 ஆக அதிகரித்துள்ளது. வரும் நாள்களில் இந்த எண்ணிக்கை மேலும் உயரும் என்றார் அவர்.

# மித்ரா டைம்ஸ்

தமிழ் & ஆங்கிலம் மாத இதழ்

MITRA TIMES - Tamil & English Monthly

மலர்: IX இதழ்: 8 | பிப்ரவரி 2024 | ஆண்டு சந்தா ரூ. 240/- | விலை ரூ. 20/-


## தொடக்கக் கல்வியிலிருந்தே மாணவர்களுக்குத் தமிழ்ப்பற்றை ஆசிரியர்கள் ஊட்ட வேண்டும் !

### அகரமுதலி இயக்குநர் முனைவர் கோ. விசயராகவன் அறிவுறுத்தல்!

தமிழ்நாடு அரசு, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம் சார்பில், மயிலாப்பூர், பேராசிரியர் சஞ்சீவி தெருவில் அமைந்துள்ள சென்னை நடுநிலைப்பள்ளி, மற்றும் நொச்சிக் குப்பம் மழலையர் தொடக்கப்பள்ளி ஆகிய இரு பள்ளிகளைச் சேர்ந்த மாணவர்களுக்கு 01.02.2024ஆம் நாள் "நற்றமிழ் அறிவோம் என்னும் தூயதமிழ் அகராதி" வழங்கப்பட்டது.

பள்ளி மாணவர்களுக்கு "நற்றமிழ் அறிவோம்" நூல்களை வழங்கிப் பேசிய அகரமுதலி இயக்குநர் முனைவர் கோ. விசயராகவன் அவர்கள், "ஆங்கிலவழிக் கல்வி கற்றாலும் நம்மைப் பெற்ற அம்மாவை அம்மா என்றும் அப்பாவை அப்பா என்றுதான் அழைக்க வேண்டும்.... டாடி..மம்மி என்று அழைக்கச்சொல்லி ஆசிரியர்கள் சொன்னாலும் நீங்கள் கேட்கக் கூடாது.... ஆங்கிலேயர் ஆட்சிக் காலத்தில்தான் நாம் அடிமைப்பட்டோம். நம் நாடு நமதென்று மறந்து போனோம்.காரணம், ஆங்கிலேயர் அவர்களின் மொழியை நம்மிடம் திணித்தார்கள். ஆங்கிலம் தெரிந்தால்தான் வேலை என்றார்கள். வயிற்றுப் பிழைப்புக்காக நம்முடைய தாய்மொழி தமிழை மறந்து போனோம். ஆங்கிலம் கலந்து பேசினோம்.... அதனால் நம் தாய்த்தமிழின் தனித்தன்மையை இழந்துபோய் நிற்கிறோம்... இந்நிலையில் நாம் அன்றாடம் பயன்படுத்தும் பொருள்களை.. நம்முடைய சுற்றுச்சூழலில் உள்ள பெயர்களை.... செயற்பாடுகளைத் தமிழில் அழைப்பதற்கான சொற்கள் அடங்கிய அகராதிதான் இந்த நற்றமிழ் அகராதி.

இந்த நூலில் 1 முதல் 5 ஆம் வகுப்பு வரையிலான மாணவர்களுக்கு அவர்களின் வகுப்பு நிலைக்கேற்ப,





அன்றாடம் பயன்படுத்தும் பிறமொழிச் சொற்களுக்கு இணையான தூயதமிழ்ச் சொற்கள் உள்ளன. எல்லாவற்றிற்கும் தமிழில் சொற்கள் உண்டு என்பதை உங்களுக்கு எல்லாவற்றிற்கும் தமிழில் சொற்கள் உண்டு என்பதை உங்களுக்கு அறிமுகம் செய்யும் நற்றமிழ் அகராதியை நீங்கள் நன்கு படித்து, வாழ்க்கையில் பயன்படுத்த வேண்டும். பள்ளிப் பருவத்திலிருந்தே பைந்தமிழ் மீதான பற்றை வளர்த்துக்கொள்ள வேண்டும். அப்போதுதான் வருங்காலத்தில் மொழிக்கலப்பில்லாமல் பேசவும் எழுதவும் முடியும். தாய்மொழியின் மேம்பாடுதான் உண்மையான வளர்ச்சி. அதற்கு இளைய மாணவத் தலைமுறை உறுதுணை நிற்க வேண்டும். விதைகளைப் பழுதின்றிப் பாதுகாத்தால்தான் நாளை நல்ல கனிகள் விளையும். மழலைக் கல்வி முதலே தாய்மொழிப் பற்றை மாணவர்களிடம் விதைத்தால்தான் வருங்காலத்தில் பிறமொழிச் சொற்கள் கலப்பில்லாத நிலையை அடைய முடியும். அதற்கு ஆசிரியர்கள் துணைநிற்க வேண்டும். வணக்கத்தில் தொடங்கி நன்றியில் நிறைவடையும் வகையில் நம் வாழ்க்கையை அமைத்துக்கொண்டால் Good morning - Thanks நம் மொழியிலிருந்து விலகும் " என்றும் தெரிவித்தார்.

நிகழ்வில் கலந்துகொண்ட பள்ளி ஆசிரியர்களுக்கு அகரமுதலி இயக்ககம் வெளியிட்டுள்ள "2023 ஆம் ஆண்டுக்கான அகராதி ஆய்வு மலர்" வழங்கப்பட்டது. நிகழ்வின்போது அகரமுதலி இயக்ககப் பதிப்பாசிரியர் கி. தமிழ்மணி உடனிருந்தார்

இந்தியாவில் அதிக படங்களுடன் வெளிவரும் ஒரே மாலை நாளிதழ்

India's No.1 English Evening Daily
EVENING TAMIL NADU

# மாலை தமிழகம்

Maalai Tamizhagam — Evening Tamil Daily
www.maalaitamizhagam.com — e-mail: maalaitamizhagam@gmail.com

சென்னை Chennai 4-2-2024 | ஞாயிற்றுக்கிழமை (தை 21) | வெளியூர் Out Station 5-2-2024 | Volume - 14 Issue -312 | பக்கம் Pages 6 | விலை Price ₹.3

# உலக உயிரியல் கோட்பாட்டின் தந்தை தொல்காப்பியர்
## அகரமுதலி இயக்குனர் கோ.விசயராகவன் பேச்சு



**கல்பாக்கம், ஜன. 4-**

சென்னை, பூந்தமல்லி அப்போலோ கலை மற்றும் அறிவியல் கல்லூரி தமிழ்த்துறை சார்பில் தொல்காப்பியர் மன்றக் கருத்தரங்கம், கடந்த 2ம் தேதி நடைபெற்றது. தமிழ்த்துறை உதவிப் பேராசிரியர் இரா. ஆனந்த ஜோதி வரவேற்புரையாற்றினார். கல்லூரி முதல்வர் ச.சுதாகர் முன்னிலை வகித்தார். தமிழ்த் துறைத்தலைவர் க.முருகேஸ்வரி தலைமையுரையாற்றிய இந்த கருத்தரங்கில், செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்கக இயக்குனர் கோ.விசயராகவன் சிறப்பு விருந்தினராக கலந்துகொண்டு உரையாற்றினார்.

அப்போது அவர் பேசுகையில், ''தமிழில் கிடைத்துள்ள மிகத் தொன்மையான ஒல்காப் பெரும் புகழ் தொல்காப்பியம் தான் தமிழ் அகராதியின் தொடக்கப் புள்ளியாக இருக்கிறது. உலகஉயிரியல் கோட்பாட்டின் தந்தை தொல்காப்பியர் இயற்றிய தொல்காப்பியம் இலக்கண நூல் மட்டுமல்ல, ஆகச் சிறந்த மொழியியல் நூலும்கூட. உலக மொழிகளிலேயே ஒலிக்கு இலக்கணம் வகுத்த பெருமை தொல்காப்பியரையே சாரும். தமிழெழுத்துகள் எந்தெந்த உறுப்புகளின் உதவியோடு எந்த இடத்திலிருந்து பிறக்கும் என்று குறித்ததோடு, ஒவ்வொரு எழுத்தும் ஒலிக்கும் கால அளவினையும் மாத்திரை என்ற அளவால் நுட்பமாக எடுத்துரைத்தவர் ஒலிகள் மற்றும் உயிரியல் ஆய்வறிஞர் தொல்காப்பியர்.

அவரின் இந்தக் கருத்துகளை இன்றுள்ள பல்வேறு நாட்டு மொழியியல் அறிஞர்களும் வியந்து போற்றிவருகின்றனர். அதேபோல், உயிரினங்களை ஓரறிவு முதல் ஆறறிவுவரை பகுத்துள்ள பாங்கும் உலக மானுடவியல் அறிஞர்கள் போற்றும் வகையில் அமைந்துள்ளது. தொல்காப்பியத்திலுள்ள பல சொற்கள் இன்றளவும் புழக்கத்தில் இருப்பதிலிருந்தே தமிழின் தொன்மையையும் தொடர்ச்சியையும் நாம் அறியமுடியும். தமிழ்மொழியிலுள்ள சொற்களைப் பாதுகாப்பதும், பிறமொழிச் சொற்கலப்பில்லாமல் பேசுவதும்தான் தமிழ்வளர்ச்சிக்கான அடிப்படைப் பணியாகும்.

சொற்களைக் காக்க காலந்தோறும் அகராதிகள் உருவாக்கப்பட வேண்டும். இன்றைய அறிவியல் காலத்தில் மின்னகராதியாய் இயங்கிவரும் தமிழக அரசு, அகரமுதலிச் சொற்குவையில் தமிழ்மொழியின் சங்க இலக்கியச் சொற்கள் தொட்டு இக்காலத்திற்கேற்ற,பல்வேறு துறைசார்ந்த தமிழ்க் கலைச்சொற்கள் வரை 15 லட்சத்து11 ஆயிரத்து 626 சொற்கள் இதுவரை பதிவேற்றம் செய்யப்பட்டுள்ளன. இச்சொற்களைப் பேராசிரியர்கள், ஆய்வாளர்கள், தமிழறிஞர்கள், இளைய தலைமுறையினர் தவறாது பயன்படுத்துவதோடு,தமிழின் சொல் வளத்தை உயர்த்துவதில் தங்களின் பங்களிப்பையும் நல்கி உண்மையான தமிழ்வளர்ச்சியில் பங்கேற்க வேண்டும்,'' என்றார். பேராசிரியர்கள், மாணவர்கள் உள்பட ஏராளமானோர் பங்கேற்ற இந்த கருத்தரங்கில், அகரமுதலித் தொகுப்பாளர் வே.பிரபு மகிழ்வுரையாற்றினார். உதவிப் பேராசிரியர் ந. விஜயலட்சுமி நன்றி கூறினார்.

தினகரன்
www.dinakaran.com

தூயதமிழ் அகராதி வழங்கும் நிகழ்ச்சி

# மாணவர்கள் நல்ல தமிழ் சொல்லை பேசி பழகலாம்

## அகரமுதலி இயக்குனர் வேண்டுகோள்



காஞ்சிபுரம், பிப்.3: தமிழ்நாடு அரசு வளர்ச்சித்துறை, செந்தமிழ் சொற்பிறப்பியல் அகரமுதலி திட்ட இயக்ககம் சார்பில், காஞ்சிபுரம் மாவட்டம், வட்டம் புன்னைமை இயாகராயர் நாயக்கர் ஊராட்சி தொடக்கப் பள்ளி மாணவர்களுக்கு, நற்றமிழ் அறிவோம் என்னும் தூயதமிழ் அகராதி வழங்கும் நிகழ்ச்சி நேற்று நடைபெற்றது.

அகரமுதலி இயக்குநர் கோ.விசயராகவன் தலைமை தாங்கி, மாணவ-மாணவிகளுக்கு நற்றமிழ் அறிவோம் என்ற அகராதி புத்தகத்தினை வழங்கினார். பின்னர், அவர் பேசுகையில்;

"அகராதியில் உள்ள நல்ல தமிழ் சொற்களை மாணவர்கள் தங்களுடைய இல்லங்களில் பயன்படுத்த வேண்டும், சுற்றுச்சூழலில் உள்ள வாழ்வியல் சொற்களையும் பொருள் உணர்ந்து தமிழில் பேசவேண்டும், அன்றாடம் நாம் பயன்படுத்துகிற பொருட்களின் பெயர்களை தமிழில் பொருள் உணர்ந்து, அகராதியில் குறிப்பிடப்பட்டுள்ளவாறு சொற்களை பேசி பழகவேண்டும் என்கின்ற ஆர்வத்தைத்தூண்டும் வகையிலும், சிறுவர்களின் கண்ணையும் கருத்தையும் கவரும் வகையிலும் படத்தோடு இந்த அகராதி அச்சடிக்கப்பட்டுள்ளது.

நற்றமிழ் அறிவோம் என்ற இந்த அகராதியின் துணைகொண்டு 1-5ம் வகுப்பு வரை பயிலும் மாணவ செல்வங்கள், படத்தை பார்த்து அதற்கான நல்ல தமிழ்ச் சொல்லை பேசி பழகலாம். எல்லாப்பொருள்களுக்கும் எல்லாச் செயல்களுக்கும் தமிழில் சொற்கள் உண்டு. அதனால்தான் உலக மகாகவி பாரதி, "சொல்லில் உயர்வு தமிழ்ச் சொல்லே - அதைத் தொழுது படித்திடடி பாப்பா!" என்று சொன்னார்.

இதனை, சிறு வயதிலேயே மாணவர்கள் புரிந்துகொண்டு அன்றாட வாழ்வியலில் தூய தமிழ் சொற்களை பயன்படுத்த வேண்டும் என்பதற்காகவே, தமிழ்நாடு அரசின் நற்றமிழ் அறிவோம் அகராதியை அரசு பள்ளிகளுக்கு சென்று வழங்கி கொண்டிருக்கிறோம். இன்றைய காலங்களில் ஆங்கிலம் கலக்காமல் தமிழ் பேசுவது என்பது கடினமாக இருக்கும் சூழலில் வருங்கால மாணவ செல்வங்கள், தமிழில் எல்லா சொல்லுக்கும் பொருள் உண்டு என்பதை இந்த அகராதியின் மூலம் தெரிந்து கொள்வார்கள்.

அதன் பயனாக வருங்காலத்தில் அவர்கள் எந்த மொழியில் கல்வி கற்றாலும், தன் தாய்மொழியான தமிழில் வாழ்வியல் சூழலுக்கு ஏற்ப பேசுவார்கள் என்பது உறுதி" என்றார்.

நிகழ்ச்சியில் ஆசிரியர்கள், 4ம் வகுப்பு மாணவர்கள் 20 பேர், 5ம் வகுப்பு மாணவர்கள் 40 பேர் என மொத்தம் 60 மாணவ - மாணவிகள் உள்ளிட்ட பலர் கலந்து கொண்டனர்.



தினமணி
3/12

## அரசுப் பள்ளி மாணவர்களுக்கு 'நற்றமிழ் அறிவோம்' அகராதி



'நற்றமிழ் அறிவோம்' அகராதியுடன் பள்ளி மாணவர்கள்.

ஸ்ரீபெரும்புதூர், பிப். 4: செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகர முதலித் திட்ட இயக்ககம் சார்பில் மேவளூர்குப்பம் அரசு தொடக்கப் பள்ளி மாணவர்களுக்கு 'நற்றமிழ் அறிவோம்' அகராதி வழங்கப்பட்டது.

நிகழ்ச்சியில், செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்கக இயக்குநர் கோ.விசயராகவன் மாணவர்களுக்கு அகராதியை வழங்கினார்.

பின்னர் அவர் பேசுகையில், அகராதியில் உள்ள தூய தமிழ்ச் சொற்களை மாணவர்கள் தங்களுடைய இல்லங்களில் பயன்படுத்த வேண்டும்.

அன்றாடம் நாம் பயன்படுத்தும் பொருள்களின் பெயர்களைத் தமிழில் பொருள் உணர்ந்து அகராதியில் குறிப்பிடப்பட்டுள்ள சொற்களைப் பேசி பழக வேண்டும் என்ற ஆர்வத்தைத் தூண்டும் வகையில் படங்களுடன் அச்சடிக்கப்பட்டுள்ளது.

எல்லாம் பொருள்களுக்கும் எல்லாச் செயல்களுக்கும் தமிழில் சொற்கள் உண்டு என்பதை இந்த சிறு வயதிலேயே மாணவர்கள் புரிந்துகொண்டு பயன்படுத்த வேண்டும் என்பதற்காகவே அரசின் நற்றமிழ் அறிவோம் அகராதியை அரசு பள்ளிகளுக்குச் சென்று வழங்கிக் கொண்டிருக்கிறோம் என்றார்.

நிகழ்வில் பள்ளித் தலைமையாசிரியர், ஆசிரியர்கள், மாணவர்கள், அகரமுதலித் திட்ட இயக்ககத் தொகுப்பாளர்கள் கலந்து கொண்டனர்.

India's No 1 English Evening Daily
EVENING TAMIL NADU
மாலை தமிழகம்
Maalai Tamizhagam
www.maalaitamizhagam.com

## சாதனை படைத்து வருகிறது செந்தமிழ் சொற்பிறப்பியல் அகரமுதலி திட்ட இயக்கம்: இயக்குனர் விசயராகவன் பெருமிதம்



[illegible]

India's No.1 English Evening Daily
EVENING TAMIL NADU

# மாலை தமிழகம்

Maalai Tamizhagam · Evening Tamil Daily
www.maalaitamizhagam.com

## பாவாணர் கோட்டம் அமைக்கும் தமிழக அரசுக்கு அகரமுதலி இயக்ககம் நன்றி!



பிப். 8-

தமிழ்நாடு அரசு, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தில் நேற்று (7ம் தேதி) 'மொழிஞாயிறு' தேவநேயப்பாவாணரின் 122வது பிறந்தநாள் விழா, இயக்குனர் கோ.விசயராகவன் தலைமையில் சிறப்பாகக் கொண்டாடப்பட்டது. இந்த நிகழ்ச்சியில் இயக்ககத்தில் உள்ள பாவாணரின் சிலைக்குத் தமிழறிஞர்கள் மாலை அணிவித்துப் புகழ் வணக்கம் செலுத்தினர்.

நிகழ்ச்சியில் இயக்குனர் கோ.விசயராகவன் பேசுகையில், "தொன்மைமிகு தமிழ்மொழி தனித்தியங்கும் தன்மைகொண்டது என்பதையும், தமிழுக்கும் உலக மொழிகளுக்குமான சொல்நிலை உறவையும், முந்துதமிழ் உலக மொழிகளுக்கு வழங்கிய சொற்கொடையையும், வேர்ச்சொல்லாய்வின்வழி நிலைநாட்டியவர் 'மொழிஞாயிறு' ஞா.தேவநேயப் பாவாணர் ஆவார்," என்றார்.

நிகழ்ச்சியில் புலவர் வெற்றியழகன், எழுத்தாளர் உதயை மு.வீரையன், புலவர் இரத்தினவேலன், மொழிபெயர்ப்புவல்லுநர் ஆக்கம் ஆடலிறைவன், வழக்குரைஞர்கள் பகலவன்,திருவளர் தமிழரசன், அரசு எழிலன், நாகை நாகராசன், செந்தமிழ்வாணன், சின்னப்பத்தமிழர், சந்திரசேகரன்,காஞ்சி அமுதன்,இ.த.ப. திருமாறன்,அகரமுதலி இயக்ககப் பதிப்பாசிரியர்கள் மா.பூங்குன்றன், மு.கண்ணன்,க. வீரவேலு மற்றும் பைந்தமிழ்ப் பாவாணர் பற்றாளர்கள் கலந்துகொண்டு பாவாணரின் தமிழ்த்தொண்டினை நினைவுகூர்ந்தனர்.

மேலும்தமிழ்ச் சொல்லாய்வுத் துறையில் அளப்பரும் தொண்டாற்றிய பாவாணரைப் போற்றும் வகையில் அவருக்குத் திருவுருவச்சிலையும்,மணிமண்டபமும் அமைப்பதற்கான அறிவிப்பினை தமிழக அரசு வெளியிட்டுள்ளதோடு,தமிழ் அகராதியியல் துறையில் சிறந்து விளங்கும் அகராதி அறிஞர்களுக்கு அகரமுதலி இயக்ககம் வழியாகத் தேவநேயப் பாவாணர் விருதும் வழங்கி வரும் அரசுக்கு நன்றியும் தெரிவித்தனர்.

மேலும்,உலக மக்களுக்கெல்லாம் பயன்படும் வகையில், சொற்குவை வலைத்தளத்தில் 15 இலக்கத்திற்கும் மேலாகச் சொற்களைப் பதிவேற்றம் செய்துள்ள அகரமுதலி இயக்ககத்தின் தமிழ்ப்பணிக்கும் வாழ்த்து தெரிவிக்கப்பட்டது.இந்த இயக்ககத்தில் அகப்பயிற்சி பெற்றுவரும் இராணிமேரி கல்லூரியின் தமிழ்த்துறை மாணவியர், அகரமுதலி இயக்கக அலுவலர்கள், பணியாளர்கள் உட்பட பலர் இதில் கலந்துகொண்டனர்.

தினகரன் 4/4

## சொற்குவை தளத்தில் 15 லட்சம் சொற்கள்

### அகரமுதலி திட்ட இயக்குநர் விசயராகவன் தகவல்



கிருஷ்ணன்கோவிலில் அரசு மேல்நிலைப் பள்ளி நூலகத்திற்கு தமிழ்நாடு அரசின் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் இயக்குநர் விசயராகவன் நூல்களை வழங்கினார். உடன் தலைமை ஆசிரியர் வீரபாண்டியராஜ்.

திருவில்லிபுத்தூர், பிப். 11: தமிழ்நாடு அரசு, தமிழ் வளர்ச்சித் துறை, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் சார்பில் சொற்குவை மாணவத் தூதுவர் பயிற்சித் திட்ட நிகழ்ச்சி கிருஷ்ணன்கோவிலில் அரசு மேல்நிலைப் பள்ளியில் நடைபெற்றது. தலைமை ஆசிரியர் வீரபாண்டியராஜ் தலைமை வகித்தார். செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் இயக்குநர் விசயராகவன்

நிகழ்ச்சியில் அரசு பள்ளி நூலகத்திற்கு அகரமுதலி இயக்ககம் வெளியிட்ட அகராதிகளும், ஆய்வு மலர் உள்ளிட்ட நூல்களும் வழங்கப்பட்டன. மேலும் தமிழ்ப் பாடத்தில் முதலிடம் பெற்ற மாணவர்களுக்குப் பரிசுகளும் பாராட்டுச் சான்றிதழ்களும் வழங்கப்பட்டன. தொடர்ந்து, மாணவர்கள் இனி வரும் காலங்களில் தாங்கள் பொது வெளியிலும் எங்கள் இல்லத்திலும் ஆங்கிலம் கலக்காமல் தனித் தமிழில் மட்டுமே பேசுவோம் என்று உறுதி ஏற்றனர்.

நிகழ்ச்சியில் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் இயக்குநர் முனைவர் விசயராகவன் பேசியதாவது:

அகரமுதலித் திட்ட இயக்கத்தின் சார்பில் பல சொற்களைத் துறைதோறும் தொகுத்து ஆய்ந்து வேர்ச்சொல் கண்டறிந்து அகராதிகளாக வெளியிட்டு வருகிறோம்.

சங்கத்தமிழ் மாலை முப்பதில் எந்த இடத்திலும் பிறமொழிக் கலப்பு என்பது அறவே இல்லை.

செந்தமிழ்ச் சொற்களும் செவ்வியல் பண்புகளும் உள்ளடங்கிய நூல்தான் ஆண்டாள் அருளிய திருப்பாவை. இந்த நூலில் உள்ள சொற்களை எல்லாம் ஆய்ந்து பார்த்துச் சொற்குவை வலைத்தளத்தில் நாங்கள் பிற மொழிக்கு இணையான தமிழ்ச் சொற்களாகச் சேர்த்திருக்கிறோம். சொற்குவை வலைத்தளத்தில் சங்க இலக்கியச் சொற்கள் - சங்கம் மருவிய கால இலக்கியச் சொற்கள் தொல்காப்பியச் சொற்கள் - ஐம்பெரும் காப்பியச் சொற்கள் - இக்காலத்தில் புழங்கக்கூடிய பல்வேறு துறை சார்ந்த நூல்களில் காணப்படும் சொற்கள் என எல்லாக் காலச் சொற்களும் தொகுக்கப்பட்டுள்ளன. இந்த தளத்தில் சொற்களின் எண்ணிக்கை 15 லட்சத்து 16 ஆயிரம் ஆக விளங்கிக் கொண்டிருக்கிறது.

உலகத்தில் எந்த ஒரு மொழிக்கும் ஒரே வலைத்தளத்தில் இத்தனை லட்சம் சொற்கள் இல்லை என்பதை எந்த இடத்திலும் எப்பொழுதும் சொல்ல முடியும். அந்த ஒரு சாதனையைத் தமிழ்நாடு அரசு, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்கத்தின் வாயிலாகச் செய்து வருகிறது. இவ்வாறு அவர் பேசினார்.

தொகுப்பாளர் பிரபு சொற்குவை வலைத்தளச் செயல்பாடு (ம) பயன்படுத்தும் முறை பற்றி எடுத்துரைத்தார். பதிப்பாசிரியர் தமிழ்மணி, ஆசிரியர்கள், மாணவ, மாணவிகள் கலந்து கொண்டனர்.

உள்ளதை உள்ளபடி தினமும் சொல்லும் ஒரே நாளிதழ்

தினமொழி
தமிழகத்தின் தாய்மொழி
DHINA MOZHI TAMIL DAILY

செய்தி & விளம்பரங்கள் தொடர்புக்கு
94443 86766
99410 86586

## மொழிஞாயிறு பாவாணரின் 122வது பிறந்தநாள் விழா!

# பாவாணர் கோட்டம் அமைக்கும் தமிழ்நாடு அரசுக்கு அகரமுதலி திட்ட இயக்ககம் நன்றி அறிவிப்பு!



சென்னை, பிப்.8:

தமிழ்நாடு அரசு, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தில் நேற்று "மொழிஞாயிறு" தேவநேயப்பாவாணரின் 122வது பிறந்தநாள் விழா சிறப்பாகக் கொண்டாடப்பட்டது.

தொன்மைமிகு தமிழ்மொழி தனித்தியங்கும் தன்மைகொண்டது என்பதையும், தமிழுக்கும் உலக மொழிகளுக்குமான சொல்நிலை உறவையும், முந்துதமிழ் உலக மொழிகளுக்கு வழங்கிய சொற்கொடையையும் வேர்ச்சொல்லாய்வின்வழி நிலைநாட்டியவர் "மொழிஞாயிறு" ஞா. தேவநேயப் பாவாணர் அவர்கள்.

அகரமுதலி இயக்ககத்தில் உள்ள பாவாணரின் திருவுருவச் சிலைக்குத் தமிழறிஞர்கள் மாலை அணிவித்துப் புகழ் வணக்கம் செலுத்தினார்கள்.

அகரமுதலி இயக்கக இயக்குநர் முனைவர் கோ. விசயராகவன் தலைமையில் நடைபெற்ற நிகழ்வில், புலவர் வெற்றியழகன், எழுத்தாளர் உதயை மூ. வீரையன், புலவர் இரத்தினவேலன், மொழிபெயர்ப்பு வல்லுநர் ஆக்கம் அ. மதிவாணன், வழக்குரைஞர்கள் பகவத்சிங், திருமலை தமிழரசன், அரச எழிலன், நாகை நாகராசன், செந்தமிழ்வாணன், சின்னப்பத்தமிழர், சந்திரசேகரன், காஞ்சி அமுதன், கி.த.ப. திருமாறன், அகரமுதலி இயக்ககப் பதிப்பாசிரியர்கள் முனைவர் மா. பூங்குன்றன், முனைவர் மு. கண்ணன், சு. வீரவேலு உள்ளிட்ட பைந்தமிழ்ப் பாவாணர் பற்றாளர்கள் கலந்து கொண்டு பாவாணரின் தமிழ்த்தொண்டுகளை நினைவுகூர்ந்தனர்.

அப்போது, தமிழ்ச் சொல்லாய்வுத் துறையில் அளப்பரும் தொண்டாற்றிய பாவாணரைப் போற்றும் வகையில் அவருக்குத் திருவுருவச் சிலையும், மணிமண்டபமும் அமைப்பதற்கான அறிவிப்பினை வெளியிட்டுள்ளதோடு, தமிழ் அகராதியியல் துறையில் சிறந்து விளங்கும் அகராதி அறிஞர்களுக்கு அகரமுதலி இயக்ககம் வழியாகத் தேவநேயப் பாவாணர் விருது வழங்கி வருகிற தமிழ்நாடு அரசுக்கு நன்றியினைத் தெரிவித்துக்கொண்டார்கள்.

மேலும், உலக மக்களுக்கெல்லாம் பயன்படும் வகையில், சொற்குவை வலைத்தளத்தில் 15 இலக்கத்திற்கும் மேலாகச் சொற்களைப் பதிவேற்றம் செய்துள்ள அகரமுதலி இயக்ககத்தின் தமிழ்ப்பணிக்கும் வாழ்த்துகளைத் தெரிவித்துக்கொண்டனர்.

நிகழ்வில் அகரமுதலி இயக்ககத்தில் அகப்பயிற்சி பெற்றுவரும் இராணி மேரி கல்லூரியின் தமிழ்த்துறை மாணவிகள், அகரமுதலி இயக்கக அலுவலர்கள், பணியாளர்கள் உள்ளிட்டோரும் கலந்துகொண்டனர்.

இந்தியாவில் அதிக படங்களுடன் வெளிவரும் ஒரே மாலை நாளிதழ்

India's No1
English Evening Daily
EVENING TAMIL NADU

மாலை தமிழகம்
Maalai Tamizhagam
Evening Tamil Daily
www.maalaitamizhagam.com
e-mail: maalaitamizhagam@gmail.com

சென்னை Chennai 9-2-2024 | வெளியீடு Out Station 10-2-2024 | Volume - 14 Issue - 317 | பக்கம் Pages 6 | விலை Price ₹.3

# தொல்காப்பியத்தை தமிழர்கள் ஊன்றிக் கற்க வேண்டும்
# அகரமுதலி இயக்குனர் கோ.விசயராகவன் வலியுறுத்தல்



**கல்பாக்கம், பிப். 9-**

தமிழ்நாடு அரசு தமிழ் வளர்ச்சித் துறை, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தில் அகப்பயிற்சித் திட்டத்தின்கீழ், சென்னை, இராணி மேரி கல்லூரித் தமிழ்த்துறை மாணவிகளுக்கான அகப்பயிற்சி கடந்த மாதம் 29ம் தேதிமுதல்வழங்கப்பட்டுவருகிறது. பயிற்சியின் நிறைவு நாளான நேற்று (8ம் தேதி) அகரமுதலி இயக்குனர் கோ.விசயராகவன் தலைமை தாங்கி உரையாற்றினார்.

அவர் பேசும்போது, "தொன்மை மிகு இலக்கண நூலான தொல் காப்பியத்தில் ஒலி-சொல்-மொழி பற்றிய செய்திகளோடு, அகராதியி யல் - கலைச்சொல்லாக்கம் - இசை பற்றிய நுட்பமான செய்திகளும் நிறைந்துள்ளன. தமிழ்மொழிக்கும் தமிழர் வாழ்வியலுக்குமான முழு மையான அதிகாரத்தை வழங்கும் பெருமைகொண்ட இரு நூல்கள் திருக்குறளும் தொல்காப்பிய மும்தான். தமிழ்மொழிக்குச் செறி வான இலக்கணக் கட்டமைப்பை வகுத்துத் தந்த ஒல்காப் பெரும்புகழ் தொல்காப்பியத்தைத் தமிழர்கள் அனைவரும், குறிப்பாகத் தமிழ்த் துறை மாணவர்கள் தொல்காப் பியத்தை மனம் ஒன்றி, ஊன்றிக் கற்க வேண்டும்.

வீட்டிலுள்ள குழந்தைகளுக்கு நாம் அன்றாடம் பயன்படுத்தும் பொருட்களுக்கான நல்ல தமிழ்ச் சொற்களைச் சொல்லிப் பழக்கப்படுத்த வேண்டும். அடுத்த தலைமுறை குழந்தைகளுக்காவது அழகிய தமிழ்ப் பெயர்களைச் சூட்டச் செய்ய வேண்டும். தமிழிலேயே தலைப்பெழுத்திட்டுக் கையொப்பமிடு வதை இளைய தலைமுறை மாணவர்கள் கடமை யாகக் கொண்டு கடைப்பிடிக்க வேண்டும். சொற் குவை வலைத் தளத்தை அதிகம் பயன்படுத்துவ தோடு, சொற் குவையின் பயன் பாட்டை மற்றவர்களுக்கும் எடுத்துரைக்க வேண்டும்," என்றார்.

பின்னர் அகப்பயிற்சியில் பங்கேற்ற மாணவிகளுக்கு அரசு சான்றிதழ்களை வழங்கிச் சிறப் பித்தார். இந்த நிகழ்ச்சியில், ஒருங் கிணைப்பாளர் ஜெ.சாந்தி, அகர முதலித் திட்ட இயக்கக அலு வலர்கள், பணியாளர்கள் உள் ளிட்டோர் கலந்து கொண்டனர்.